



# Ambi's

ஊறுகாய்கள்

**அம்பீஸ் சுவை,**
**ஒரு தாயின் கை தேர்ந்த**
**சுவை போல் ஆவலைத்**
**தூண்டும் சுவை.**

*16க்கும் மேற்பட்ட சுவை*
*ரகங்களில் கிடைக்கிறது.*

தயாரிப்போர்:
அம்பீஸ் பிக்கிள்ஸ் அண்ட்
காண்டிமெண்ட்ஸ் ஆப் இந்தியா
ஏற்றுமதி செய்வோர்:
வெஸ்டர்ன் எக்ஸ்போர்ட்ஸ் (இந்தியா) பிரைவேட் லிட்
19, நீலகண்ட மேத்தா தெரு, தி. நகர்
சென்னை–17 தொலைபேசி: 447355

3869




APRC: 109





# நொறுக்குத் தீனி





⌘ ஸ்ரீதேவி - எஸ். வி. சேகர்
''உங்களுக்கு அவார்டு உண்டா?''

⌘ வாணி - கமல் - பிரதாப்
எழுதக் கூடாத ஜோக்

⌘ எஸ். பி. பி. - பி. பி. எஸ்
ஏதோ கூறி வருத்தப்பட்டுக் கொண்டு...

⌘ ஜெயலலிதா
'என்னடா வம்பாப் போச்சு...'

● வறுமையின் நிறம் சிவப்பு தெலுங்குப் படத்தின் நூறாவது நாள் விழா சமீபத்தில் சென்னை உட்லண்ட்ஸ் ஹோட்டலில் நடைபெற்றது. கலைஞர்களுக்குப் பரிசளிப்பதற்காக ஜெயலலிதாவை அழைத்திருந்தார்கள். மேடையில் அவரை வரவழைத்து, கலைஞர்களை ஒவ்வொருவராக மேடைக்குக் கூப்பிட்டு அவர்களுக்குப் பரிசளிக்கத் தன்னிடம் கேடயத்தை அளிப்பார்கள் என்று எதிர்பார்த்த அவருக்கு ஏமாற்றம்தான் மிஞ்சியது. நின்று கொண்டிருக்கும் ஜெயலலிதாவுக்கு இடதுபுறம் இருப்பவர் பரிசை எடுத்து நீட்டுவார். வலதுபுறம் இருப்பவர் தான் கைநீட்டி வாங்கிக் கலைஞர்களுக்கு அளிப்பார்! 'என்னடா வம்பாப் போச்சு?' என்று நினைத்தாரோ என்னவோ ஜெயலலிதா பாதியிலேயே எழுந்து போய்விட்டார்.

● ஸ்ரீதேவி பள்ளிக்கூட மாணவி மாதிரி 'த்ரில்'லாக இருந்தார். 'எனக்கு அவார்டு கொடுக்கப் போறாங்க. உங்களுக்கு உண்டா?' என்று எஸ். வி. சேகரைப்பார்த்துக்கேட்டார். ''நல்லா நடிச்சிருக்கேன்னு அவங்க நினைச்சிருந்தாக் கொடுப்பாங்க'' என்றார் அடக்கத்துடன். அந்த அடக்கம் அவருக்கு உதவவில்லை. அவருக்குப் பரிசே இல்லை.

● ஸ்ரீதேவிக்கு இந்த விழா என்றில்லை; எந்தப் பரிசளிப்பு விழாவின்போதும் ரொம்பத் 'த்ரில்லிங்'காக இருக்குமாம். '' 'ஸ்ரீதேவி!' என்று மேடையிலிருந்து கூப்பிட, பலத்த கைதட்டல்களுக்கிடையே மேடைக்குப் போகும்போது உடம்பு எப்படிநடுங்குகிறது!'' என்றார் அவர்.

● கமலஹாசன் முன்னாடியே வந்துவிட்டார். ஜெயலலிதா, ஸ்ரீதேவி, பிரதாப் போன்றோர் முன் வரிசையில் போய் உட்கார்ந்த பிறகும் கமல் மட்டும் எதற்கு வாசல் பக்கத்திலேயே நிற்கிறார் என்று யோசித்தேன். ஓ! வாணி இன்னும் வரவில்லை. மனைவி வாணி அண்ணன் ஹாஸனுடன் வந்தபோது மனைவி

யுடன் போய் முன் வரிசையில் அமர்ந்து கொண்டார். நல்ல கணவன்!

● பி. பி. ஸ்ரீனிவாஸ் இறை வணக்கம் பாடினார். பாடிவிட்டுத்தான் கமலையும் ஸ்ரீதேவியையும் பாடினதாகச் சொன்னார். என்னடா இது? அதாவது லட்சுமி தெய்வத்தையும் அவள் அமர்ந்திருக்கும் தாமரையையும் பாடினாராம்! யாரும் அவர் சொன்னதைப் புரிந்து ரசித்ததாகத் தெரியவில்லை. இதுவே பாதிக் கோபம் அவருக்கு. தமக்குப் பரிசே கிடையாது என்று தெரிந்த பிறகு எப்படி இருந்திருக்கும் மனிதருக்கு? இத்தனைக்கும் அந்தப் படத்துக்காக ஒரு இந்திப் பாட்டு வேறே (மேரே ராஜா) எழுதியிருக்கிறார் அவர். இந்த வயிற்றெரிச்சல் போதாதென்று எல். ஆர். ஈஸ்வரியைப் பரிசு பெற மேடைக்கு அழைத்தார்கள்! அவர் எந்த வகையில் படத்துடன் சம்பந்தப்பட்டவரோ தெரியவில்லை. விடுவிடுவென்று மேடைக்குப் போனார் பி. பி. எஸ். யார் பேருக்கோ யாரோ கொடுத்த பரிசைத் தான் வாங்கிக் கொண்டு (பிடுங்கிக்கொண்டு) திரும்பினார். மேடையிலிருந்து கூடவே இறங்கி வந்த ஒருவர், நைஸாகப் பேசிப் பரிசைத் திரும்பப் பெற்றுக் கொண்டு போய் விட்டார் அதையே வேறு யாருக்கோ தர! பி. பி. எஸ். கீழே நின்றிருந்த எஸ். பி. பாலசுப்ரமணியனிடம் ஏதோ கூறிவிட்டு வருத்தப்பட்டுக் கொண்டார்.

● மேடையில் நிகழ்ச்சிகள் நடைபெற்றுக் கொண்டிருந்தபோது, பிரதாப், கமலிடம் ஏதோ சொல்ல இருவரும் சிரித்தார்கள். ''என்ன ஜோக்?'' என்று கேட்டேன். எழுதக் கூடாத ஜோக்காம்!

காமா சோமாவென்று விழாவென்ற பெயரில் என்னவோ நடந்துகொண்டிருந்தது. இத்தனைக்கும் மத்தியில் டைரக்டர் கே. பாலசந்தர் மேடையில்தான் அமர்ந்து கொண்டிருந்தார். எதையும் கண்டுக்கவில்லை.

படங்கள், தகவல்: பிரபுசங்கர்

● ● ●

சில தினங்களுக்கு முன் சென்னை நகரெங்கும் ஒரு சுவரொட்டி ''ஒரு தேங்காயை எடு, ஒரு தேங்காயை உடை!'' என்று மக்களைக் கேட்டுக் கொண்டிருந்தது. 'யார் இவ்வளவு அக்கறையாகப் பக்தி வளர்த்துத் தேங்காய் உடைக்கச் சொல்கிறார்கள்? எந்தப் பிள்ளையாருக்கு?' என்று எண்ணி வந்த வேளையில் தோன்றிய இன்னொரு சுவரொட்டி, பிரிட்டானியா நிறுவனம் தேங்காய் பிஸ்கட்டை அறிமுகப்படுத்தியுள்ளதை உணர்த்தியது. ஒரு பாக்கெட் வீட்டுக்கு வாங்கி வந்தால் நிமிஷமாகக் காலியாகி விட்டது. சரியான நொறுக்குத் தீனி!

—கு. கி.

"எங்கள் வீட்டு
சமையல்
எப்போதும் சுவை
யுடனும் நல்ல
மணத்துடனும்
இருக்கக்
காரணம்"



V.V.D

# தேங்காய் எண்ணெய்




உங்கள் தேவைக்கேற்றபடி
பலவித பாக்கிங்குகளில்
கிடைக்கின்றது.

V.V. தனுஷ்கோடி நாடார் & சன்ஸ்
தூத்துக்குடி-628 001

EP.VVD.1006



மத்திய அரசின் வருமானவரி அதிகாரிகள் குண்டர்களால் தாக்கப்பட்ட போது காஷ்மீர மாநில அரசு பாதுகாப்பு தரவில்லை!






# உதவாக்கரைக் கார்ப்பரேஷன்!

ஆமை புகுந்த வீடும் அமீனா புகுந்த வீடும் உருப்படாது என்பார்கள். சர்க்கார் புகுந்த தொழிலும் வியாபாரமும் அப்படித்தான் — உருப்படாது.

எத்தனையோ உதாரணங்கள்: சமீபத்தில் அம்பலத்துக்கு வந்திருக்கும் உண்மைகள் அரசு நடத்தும் உணவு வர்த்தக கார்ப்பரேஷனை உதவாக்கரைக் கார்ப்பரேஷனாக்குகிறது.

உ. வ. கா. அமைக்கப்பட்டதன் நோக்கம் என்ன? உற்பத்தியாகும் பொருளுக்குக் கட்டுப்படியாகும் விலை விவசாயிகளுக்குக் கிடைக்க வேண்டும். மக்களுக்கு மலிவு விலையில் உணவுப் பொருள்கள் கிடைக்க வேண்டும். இடைத் தரகர்கள் கொள்ளை லாபம் அடிக்க முடியாமல் செய்துவிட வேண்டும்.

ஆனால் இந்த நோக்கங்கள் நிறைவேறினவா?

''இல்லை'' என்கிறது அரசுத் துறை நிறுவனங்கள் கண்காணிப்புக் கமிட்டி. நாடாளு மன்றத்தில் தனது 22வது அறிக்கையைச் சமர்ப்பித்த அது கூறுகிறது:

(1) உ. வ. கா. போதிய அளவில் கொள்முதல் செய்யவில்லை. (2) விவசாயிகளிடம் நேரடியாக வாங்கவில்லை; விவசாயிகள் கூட்டுறவு சங்கங்களிடமும் வாங்கவில்லை. 70 சதவீதத்துக்கு மேல் இடைத் தரகர்களிடமே வாங்கிற்று! கொள்முதல் விலையை விவசாயிகளுக்குக் கட்டுப்படியாகிற விதமாக அரசு அதிகரித்து நிர்ணயிக்கிறது. ஆனால் இந்த அதிகரித்த விலையின் பயனை விவசாயி முழுமையாக அடையவில்லை. பெரும்பாலும் இடைத் தரகர்களே லாபமடித்தார்கள்! (3) உணவு வர்த்தக கார்ப்பரேஷனின் செலவினங்கள் மிகவும் அதிகம். அதிகாரிகள், ஊழியர்கள், ஜீப்கள், கட்டிடங்கள், கிடங்குகள் என்று செலவினங்கள் அதிகரிக்கும்போது உ. வ. கா. வியாபாரம் செய்யும் பொருளின் விலையும் பயங்கரமாக உயர்கிறது. உ. வ. கா. விவசாயியிடம் வாங்கும் விலையை விட உ. வ. கா. விற்பனை செய்யும் விலை 75 சதவீதம் அதிகம்! இந்த வித்தியாசம் ரொம்ப ரொம்ப அதிகம் என்று சுட்டிக் காட்டுகிறது கண்காணிப்புக் கமிட்டி.

இம்மாதிரி 75 சதவீத விலை ஏற்றத்தை மக்களால் தாங்க முடியாது என்பதால் அரசு, உ. வ. கா.வுக்கு மானியமும் தந்து, உணவுப் பொருள்களை மக்களுக்குக் குறைந்த விலையில் கிடைக்கச் செய்கிறது.

ஆக, அரசு இரண்டு இடங்களில் மானியம் தருகிறது. முதலில் விவசாயிக்குக் கட்டுப்படியாகும் விலை கிடைக்க அரசு தரும் மானியம். இரண்டாவது மக்களுக்குக் கட்டுப்படியாகும் விலையில் உணவுப் பொருள் கிடைக்க மறுபடியும் உ. வ. கா.வுக்குத் தரும் மானியம்.

இவ்வாறு அரசு மானியம் தருகிறது என்றால் என்ன அர்த்தம்? நீங்களும் நானும் தருகிறோம் என்பதுதான் பொருள். மக்களின் வரிப் பணம்தான் இதற்கும் பயன்படுகிறது. ஆக, உணவுப் பொருளின் விலை உயர்வு என்பதற்குப் பதில் பல்வேறு வரிகள் என்ற பெயரில் மக்கள் கொடுத்து அழுகிறார்கள். அவ்வளவுதான் வித்தியாசம்! இவ்வளவு மானியம் அளித்த பின்னரும் உணவுப் பொருள்களின் விலை கட்டுப்படுகிறதா என்றால் அதுவும் இல்லை! அதுபாட்டுக்கு உயர்ந்து கொண்டேதான் போகிறது.

இதற்கெல்லாம் விடிவு காலம் எப்போது?

என்றைக்கு, விவசாய – தொழில் – வர்த்தக அபிவிருத்திக்குத் தேவையான அடித்தளத்தை (Infra Structure) அமைப்பது மட்டும்தான் அரசின் வேலை; கட்டிடம் எழுப்புவது மக்களின் வேலை என்பதை அரசு புரிந்து கொள்கிறதோ, என்றைக்கு மக்களைத் தொழில் வர்த்தகத் துறையில் பூரண சுதந்திரத்துடன் இயங்க அனுமதிக்கிறதோ அன்று பொழுது புலரும்.

அதுவரை கண்காணிப்புக் கமிட்டிகளுக்கு ஒருபுறமும் கண்துடைப்புக் கமிட்டிகளுக்கு இன்னொரு புறமும் நிறையவே வேலை இருக்கும்!

1981 மே 10

துன்மதி சித்திரை 28

மலர்: 39 இதழ்: 41



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்




– அனிதா

பேராபத்திலிருந்து பிரதமர் தப்பினார். பெரியதொரு அபகீர்த்தியிலிருந்து பாரத ஜனநாயகம் தப்பியது.

எப்படிப்பட்ட அநாகரிகமான சதிச்-செயல்? பிரதமர் பயணம் செய்யவிருந்தவிமானத்தில் கோளாறு உண்டாக்கி, அதை... ...சேச்சே... எழுதவே கை கூசுகிறது.

தக்க தருணத்தில் கண்டு பிடித்துப் பிரதமரைத் தப்புவித்தவர்களைப் போற்றுவோம். பிரதமருக்கு நீண்ட ஆயுளையும் பூரண ஆரோக்கியத்தையும் அளிக்க இறைவனைப் பிரார்த்திப்போம்.

கருத்து வேறுபாடுகளை மதியாலோசனை மேடையில் அலசுவோம். சதியாலோசனை மண்டபத்தில் அல்ல.

இது துன்மதியாண்டானாலும் நம்மிடையே நன்மதியே நிலவ வேண்டும்.

• • •

கடமை: தமிழக சட்ட மன்றத்தில் பேப்பர் வெய்ட்கள் பறக்கின்றன.

கண்ணியம்: தமிழக சட்ட மன்றத்தில் செருப்புக்கு இறக்கை முளைக்கிறது!

கட்டுப்பாடு: தி. மு. க., அ. தி. மு. க. உறுப்பினர்கள் சபாநாயகரின் ஆசனத்தின் எதிரே அதைச் சூழ்ந்து நின்று ஒருவரை ஒருவர் திட்டிக் கொள்கிறார்கள், கையசைத்து மிரட்டுகிறார்கள், கூச்சலிடுகிறார்கள்.

அண்ணா நாமம் வாழ்க!

• • •

“ஸ்ரீநகரில் வருமானவரி அதிகாரிகள் கள்ளப் பணம், தங்கம் கண்டு பிடிக்கப் போய் அடி உதை பட்டுக் கொண்டு திரும்பினார்கள்.

வருமானவரி அதிகாரிகளின் இந்தப் படையெடுப்பே சதிச் செயல் என்றும்,. அரசியல் உள் நோக்கம் கொண்டது என்றும் நிரூபிக்க முயலும்போது ஷேக் அப்துல்லா தமது அசட்டுத்தனத்தைத்தான் வெளிப்படுத்துகிறார். நாடெங்கும் சோதனை நடத்தும் வருமான வரி அதிகாரிகள் காஷ்மீரத்தில் புகும்போது மட்டும் அது சதிச் செயலாகி விடுமா? மடியில் கனமிருந்தால்தானே வழியில் பயம்? ஒளிக்க ஒன்றுமில்லை எனில் வருமானவரிஅதிகாரிகளைத் தாக்குவானேன்?

சோதனைக்கு உள்ளான கம்பெனி நிர்வாகிகளின் அரசியல் அபிமானங்களைச் சந்தேகத்துக்கு இடமின்றி அம்பலத்துக்குக் கொண்டு வந்தார்ஷேக்அப்துல்லாவின் மகன் ஃபரூக் அப்துல்லா. அவர் குறிப்பிட்ட நிறுவனத்தின் கட்டிடத்துக்கு விஜயம் செய்து திரும்பியதும்தான் குண்டர்களின் தாக்குதலே ஆரம்பமாயிற்று. வருமான வரி அதிகாரிகளுக்குத் தக்க தருணத்தில் காஷ்மீர அரசு போலீஸ் பாதுகாப்புத் தரவும் தவறிவிட்டது.

காஷ்மீருக்கு விசேஷ அந்தஸ்து தந்திருக்கிறோம் நாம். ஆனால் தரப்பட்டுள்ள தனி கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ள காஷ்மீரத் தலைவருக்குத் தெரிய வேண்டும்.

நமது அரசின் பொருளாதாரக் கொள்கை கறுப்புப் பணம் உருவாக உதவுபடியாக இருக்கிறது என்பது வாஸ்தவம்தான். ஆனால் இந்தக் கருத்து மாறுபாடு கள்ளப் பணத்தை நியாயப்படுத்தி விடாது.

• • •

“கல்கி இளைஞர்களைக்கவரத்தான் செய்கிறது; கெடுக்கவில்லை''என்று அனிதா இங்கு எழுதியதன் மூலம் கல்கிப் பத்திரிகை சுய விளம்பரம் தேடுகிறதாம்! இப்படி ஒரு அபத்தமான பழி சுமத்துகிறவர் யார் தெரிகிறதல்லவா?

தங்கள் பத்திரிகையில் வெவ்வேறு புனை பெயர்களில் திரும்பத் திரும்பத் தாங்களே எழுதிப் பக்கத்தை நிரப்பிக் கொள்வதுடன் தங்கள் புகைப் படங்களை மீண்டும் மீண்டும் பிரசுரித்து இமேஜ் பில்ட் பண்ணிக்கொள்கிற பத்திரிகை ஆசிரியர்கள் நடத்தும் பத்திரிகையில்தான் நக்கீரன் புலம்புகிறார், கல்கி பத்திரிகை சுய விளம்பரம் தேடிக்கொள்கிறதே என்று!

என்ன சொல்லி என்ன பயன்? நக்கீரனுக்கு ஒரு இழவும் புரியப்போவதில்லை. ஏப்ரல் 26ம் தேதி கல்கியில் நான் எழுதியதை வாசித்துக் கொண்டே இருந்தாராம். ஒன்றும் புரிந்து கொள்ள முடியாமல் குழம்பித் தலையைச்சொறிந்துகொண்டேஇருந்தாராம்! அவரே சொல்கிறார். 'அனிதாவால் தொடக்கத்தில்எழுதப்பட்ட பிரச்னையை விட்டு விட்டு அவர் வாதங்களில் எங்கெங்கோ தாவிக் கொண்டே இருக்கிறாரே ஏன்?', என்பது இப்போது தெளிவாகிறது. அவருக்கு எதையும் புரிந்து கொள்கிற சக்தியே இல்லை!

புரிந்து கொள்கிற சக்தியற்றவரிடம் விவாதம் ஒரு கேடா? இத்துடன் முற்றுப்புள்ளி.

# ஏழாண்டு இல்வாழ்க்கை

எனக்குத் திருமணமாகி முதல் இரண்டு ஆண்டுகளில் நான் அவரைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. அந்த நாட்களில் ஆசையும் மோகமும்தான் அதிகமாக இருந்தன. அடிக்கடி கோபமும் வரும் அவருக்கு. ஆனல் முதல் ஆண் குழந்தை பிறந்த பிறகு அவரிடம் சில மாறுதல்கள் தெரிந்தன. குடும்பப் பொறுப்பு அதிகமானது. கோபம் குறைந்து என் மேல்ஒருவித பச்சாதாபமும் அன்பும் பிறந்தது. இப்போது நான் இரண்டு குழந்தைகளின் தாயார். என் கணவரும் நானும் ஒருவரை யொருவர் நன்கு புரிந்து கொண்டு விட்டோம். கல்யாணமான புதிதில் என் மேல் அதிகாரம் செலுத்தியவர் இப்போது அன்பு காட்டத் துவங்கியிருக்கிறார். கோபத்துக்குப் பயந்து காரியங்களைச் செய்வதை விட அன்புக்குக் கட்டுப்பட்டுச் செய்வது எனக்கு உற்சாகமாக இருக்கிறது. அவர் அன்பில் பாசம் கலந்திருக்கிறது. என் உடல் நலத்தில் அதிக அக்கறை காட்டுகிறார்.

எல்லாப் பெண்களிடமும் கலகலப்பாகத் தான் பேசுவார். அதை நான் தப்பாக எடுத்துக்கொள்வதில்லை. வரவேற்கிறேன். அவர் மனத் தூய்மை எனக்குத் தெரியும்.

—ஹேமா செல்லப்பா



■ "தி கார்" என்ற 'திகில்' படத்தில் பாசத்துக்கும் ஒரு காட்சி!

உஷ்! இது என்ன சார் அக்கிரமமாயிருக்கிறது. சும்மா இருக்கிற சங்கை ஊதிக் கெடுக்கிற மாதிரி Seven year itch அது இதென்று. கல்கியைப் படித்து இனிமேல் தான் அவர் தெரிந்து கொள்ள வேண்டும். ஜாக்கிரதையாக அந்தப் பக்கத்தை அவருக்குத் தெரியாமல் கிழித்தெடுக்க வேண்டும் முதலில்.

ஆயிற்று! போன மாதம் மார்ச் 24ம் தேதியோடு எங்களுக்குத் திருமணம் ஆகி ஏழு ஆண்டுகள் ஆகிவிட்டன.

இருவரும் வெவ்வேறு திசைகள். இருந்தாலும் ஒருவரை யொருவர் புரிந்துகொண்டு அநுசரிக்க முயற்சி செய்வதால் (!?) அவர் மீது எனக்கு அன்பு அதிகரித்தே வருகிறது. இருவரும் முன்கோபிகள். குரல் உயர வாக்கு வாதம் நடக்கும். ஆனல் இருவருமே எங்களை உணரத் தலைப்பட்டு வெகு விரைவில் சகஜநிலைக்குத் திரும்பி விடுவோம். முன்பெல்லாம் அவர் புஸ்தகங்களை தொட மாட்டார். ஆனல் அவ்வப்போது நான் படிக்கிற கதைகளைச் சொல்லி அவருக்குக் கதைகளில் சுவாரஸ்யமூட்டி இப்போதோ அவர் வாங்கி வருகிற புத்தகங்களைப் படிக்க எனக்குத் தான் நேரமில்லை. சுபாவமாகவே ரொம்ப ரிசர்வ்டு டைப் ஆனதால் ஆண்களோடேயே சரியாகப் பேசமாட்டார். இந்த அழகில் பெண்களோடு மூச்! இனி மேல்தான் அவருக்கு இந்த S. Y. I. உண்டா என்று நைஸாகக் கண்காணிக்க வேண்டும்.

மண வாழ்க்கையின் ஆரம்ப கட்டத்தில் ரொம்பவும் கஷ்டப்பட்டிருக்கிறோம். கிட்டத்தட்ட இரண்டாண்டுகள் வேலை இல்லாமல் இருந்ததும் அந்தச் சமயத்தில் எனக்கு ஒரு பெண் குழந்தை பிறந்து ஒன்பதே மாதத்தில் அதற்கு நாங்கள் அலுத்துப் போய் இறந்ததும் எழுத வேண்டுமானல் — வேண்டாம் அதெல்லாம் முற்றுப்பெற்று விட்ட சிறு கதைகள். அவை இனித் தொடர வேண்டாம். அது மாதிரி மிகவும் இக்கட்டான சமயங்களில் கூட எனக்குத் தாயாகி, தந்தையாகி, தோழியாகி ஆறுதல்சொல்லித் தேற்றியதை என்ன சொல்ல?

ஐந்து ஆண்டுகளுக்கு முன் டெல்லி வந்து நாங்கள் படிப்படியாக உயர்ந்து வருவது ஸ்ரீ தேவி கருமாரி அம்மனின் திருவருளால் என்பது சத்தியம்.

இன்று ஒருவருக்கொருவர் பக்க பலமாக வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்பதைத் தவிர வேறொன்றும் அறியாத நேரத்தில் Itch ஆவது மண்ணாவது!

கடினமான உழைப்பும் நேர்மையான மனமும் கொண்டவர். 'வராத தட்சணை'யுடன் வந்த என்னை இன்றுவரை குத்திக் காட்டாதவர். எங்களிடையே அலைபறக்கும் விவாதங்கள் பல என்றாலும் என்னைஏசாதவர். சிறுவையாய் பல துக்கங்களைத் தாங்க நேர்ந்தும் என்னைக் கை விடாது காதல் கொண்டு கைப்பிடித்திருக்கும் என் கணவருக்கு என்மீது ஏழாண்டு என்ன எழுபதாண்டானலும் அன்பு குறையுமா? நீங்களே சொல்லுங்கள்.

—கீதா நாதன்

"நீயும் வரணும்னு எப்படி? நான் அமெரிக்கா போறது அயல் நாட்டு வியாபாரத்துக்காக; அயல்நாட்டு விவகாரத்துக்காக இல்லே!"

கார்டூன் நன்றி: எகனுமிக்ஸ்டைம்ஸ்



The body of St. Thomas lies in the province of Maabar in a little town (Santhome-Madras)
-Marco Polo (1298AD)

## 6

ஃபிரான்ஸிஸ் டே தமது குதிரையிலிருந்து கீழே இறங்கி அந்தக் கீழை நாட்டு அழகியை உற்றுப் பார்த்தார்.

என்ன அழகான பெண் இவள்!

கண்கள் இரண்டும் பர்கண்டி திராட்சைகள்!

தீர்க்கமான மூக்கு ரோம் தேவதை ஸிந்தியாவுடையது!

டூலிப் போன்ற செண்டு உடல்!

தனியாக ஒரு ஸானெட் நிற்பது போல் நின்றாள்.

டே மகா ரசிகன். மதிரா மதுவானாலும் சரி, மில்டன் கவிதையானாலும் சரி. (அப்போது மில்டன் உயிரோடு இருந்தார்.) இரண்டையும் இனிமையாக நுகர்பவன் அவன்.

வலது கோட் பாக்கெட்டில்

Poems of Mr John Milton Both English and Latin Compos'd at several times (f■s)

என்ற தலைப்புடன் லண்டனில் 1629ல் அச்சிட்ட ஆக்டேவோ அளவு புத்தகம் பத்திரமாக உறங்கிக் கொண்டிருந்தது.

டே மனசைப் பறிகொடுத்து நிற்பதை ஒவ்வொரு கணமும் ரசித்த வான் கோயன்ஸ் மெள்ள முன் வந்தான்.

—மிஸ்டர் டே! தங்கள் கண்கள் என்ன, பஞ்சத்தில் அடிபட்டிருக்கிறதா? என்று கேட்டான்.

''இவள் ஓர் அற்புத அழகி. இவளைப் பார்த்தால் கவிதை தானாக வருகிறது. இவளை எனக்குக் கொடு!'' என்றான் டே.

''ஹூம்! நீங்கள் வெறும் வியாபாரி! உமக்கு எதுக்கு இவள்! இவளை ஹாலண்ட் அனுப்பப் போகிறேன். அங்கே ஏதாவது செல்வச் சீமானுக்கு ஆசை நாயகியாக இருப்பாள்.''

டேக்குக் கோபம் வந்தது.

தனது அந்தஸ்தை கோயன் குறைவாக மதிப்புப் போடுகிறானே!

''வீண்கதைபேசாதே! இவளை என்ன விலைக்குத் தருவாய், சொல்லு!'' என்றான் அழுத்தமாக.

''உம்மால் கொடுக்க முடியுமா?'' என்றான் கோயன்ஸ்.

''நிச்சயம்.''



''டியாரு சும்மா விடுவாளா?''

''அதைப் பற்றி உனக்கென்ன கவலை?''

''சரி. நூறு பவுன் கொடும்!''

''நூறு பவுனு? இவனுக்கா? நீர் இவளை ஐந்து ஷில்லிங்குக்கு மேல் வாங்கியிருக்கமாட்டீர்'' என்றான் டே.

கோயன்ஸ் சிரித்தான்.

''இது போன்ற வியாபாரத்தில் யாராவது உண்மை அடக்க விலையைச் சொல்வார்களா?'' என்று கேட்டான்.

''கடைசியாக எவ்வளவுக்குத் தருவாய்?'' என்றான் டே.

''இவள் ஒரு பேரழகி! அரச குமாரி போன்ற தோற்றம். இவளைப் பத்திரமாக ஹாலந்தில் கொண்டு எவ்வளவு விலைக்கு விற்பேன் தெரியுமா?''



டே பேசவில்லை.

மீண்டும் ஒரு முறை சுவர்ணமுகியைப் பார்த்தான். இப்போது கிரிஸ்டபர் மார்லோவின் கவிதை நினைவுக்கு வந்தது.

Come live with me and be my love
And we will all the pleasures prove!

ஒவ்வொரு வரியும் அவர் மனத்தில் உருள, அவற்றில் சுவர்ணமுகியின் வெவ்வேறு போர்ட்ரெய்ட் தோற்றங்கள் மெள்ளப் பனி போல் தெரிந்தன.

இரவில் ஓர் அருமையான இந்திய அணங்குடன் கேளிக்கையான நேரத்தைப் போக்க வேண்டும் என்று பல முறை நினைத்திருக்கிறான் அவன். இதுவரை எத்தனையோ பெண்களை ருசித்து விட்டாலும் அவன் விரும்பிய அந்த 'அருமையான' பெண் கிடைக்கவில்லை.

சுவர்ணமுகியைப் பார்த்ததும் அவனது நினைவில் எண்ணற்ற அறைகள் புதிது புதிதாகத் திறந்து கொண்டதை அவன் உணர்ந்தான். அது இயற்கையாக அவன் மனத்தில் நிகழ்ந்த மாறுதல்!

இந்தப் பெண்தான் அவன் இத்தனை நாளும் தேடியவள் என்று ஓர் உணர்ச்சியும் தோன்றியது.

எத்தனையோ பேரிடத்தில் காணக் கிடைக்காத அரிய இன்பங்கள் இவள் மூலம் நிச்சயம் கிடைக்கும் என்று அவன் நம்பினான்.

ஆனால் இங்கே கோயன்ஸ் சொல்லும் விலை ஏகமாக இருக்கிறது. அந்த விலைக்குத் திருநெல்வேலிச் சீமை முழுவதையும் வாங்கிவிடலாம்.

இந்த நாட்டில் இப்பொழுது நூறு பவுனுக்கு மக்கள் எல்லோரையுமே விலைக்கு வாங்கிவிடலாம்!

அவ்வளவுக்குப் பஞ்சம் மலிந்திருக்கிறது.

ஜனங்கள் உணவில்லாமல் கஷ்டப்படுகிறார்கள்.

இந்தச் சமயத்தில் கோயன்ஸ் அந்தப் பெண்ணின் விலையைத்

# சுவர்ணமுகி

ஸ்ரீவேணுகோபாலன்

தூக்குவது வேண்டுமென்றே செய்யும் செய்கை என்று நம்பினான்.

''வெல், மிஸ்டர் டே! நான் புறப் படறேன்!'' என்று கிளம்பினான் கோயன்ஸ்.

''அப்போ தீர்மானமா என்னசொல்றே?'' என்றான் டே.

''ஒரே பேச்சுத்தான். நான் வரேன்'' என்று புறப்பட்டான் கோயன்ஸ்.

ஸாந்தோமே கடற் கரையில் கட்டு மரங்களும், மசூலா படகுகளும் சுறுசுறுத்துக்கொண்டிருக்க,

கடலுக்குள் வெகு தூரத்தில் எண்டவர் என்ற பாய்மரக் கப்பல் நங்கூரம் பாய்ச்சி இருந்தது.

கடல் மணலில் நிறைய இந்திய-ஐரோப்பிய வியாபாரிகள் குழுமி இருந்தார்கள்.

சீமாட்டிகளும் சீமான்களும் பல்லக்குகளில் உட்கார்ந்து கொண்டே பேரம் பேசினார்கள்.

சீமாட்டிகளைச் சிலர் தங்கள் தோள்களில் தூக்கித் தண்ணீரில் நடந்து படகில் ஏற்றிக் கொண்டிருந்தார்கள்.

சீமாட்டிகளின் கால்கள் கடல் நீரில் நனையக் கூடாதாம்! சுமந்தவரின் கழுத்தைச் சுற்றிக் கால்களை இருபுறமும் தொங்கவிட்டுக் கொண்டிருந்தார்கள்.

சுவர்ணமுகி மற்றப் பெண் அடிமைகளோடு அந்தச் சுடு மணலில் நின்று வானத்தையும் கடலையும் மாறி மாறிப் பார்த்தாள்.

படகுகளில் அழும் அடிமைச் சிறுவர்களும் பெண்களும் ஆண்களுமாக ஏற்றப்பட்டிருந்தார்கள்.

இந்த மனித வியாபாரப் பொருட்கள் பொங்கி வழிவதுபோல் படகுகளில் புடைத்துக் கொண்டு வெளியே தெரிந்தன.

அநேகரது கேவலமான அழுகை மனத்தைக் கரைக்க வல்லதாயிருந்தது.

எல்லாரும் பட்டினியால் ஏற்கனவே பாதி உயிரை விட்டிருந்தார்கள்.

கரையை விட்டு விலகிச் செல்லும் பட்சத்தில் மீதிப் பாதி உயிரையும் விட்டுவிடுவார்கள் போல் அடிவயிற்றிலிருந்து அழுது கொண்டிருந்தார்கள்.

சுவர்ணமுகி எல்லாவற்றையும் சோகத்தோடு பார்த்தாள்.

நாடு எப்படி க்ஷீணித்து விட்டது! அதன் வளம் எப்படி மறைந்து விட்டது! மழையில்லாத பஞ்சம் ஒரு புறம் இருக்கட்டும்.



அருள்வாக்கு

## ஆதி சங்கரரின் மகிமை

பூர்வ காலங்களில் அசுரர்கள் என்று தனியாக ஓர் இனத்தவர் வருவார்கள். அவர்களை சம்ஹாரிக்க விஷ்ணு ஆயுதபாணியாக வருவார். இந்தக் கலியில் ராக்ஷஸர்கள் தனியாக இல்லை. விசுவாமித்திரரின் யாகத்தைக் கெடுக்க, ஸுபாஹு, மாரீசன் என்ற ராக்ஷஸர் வந்ததாகவும் ஸ்ரீராமர் அவர்களை வதைத்ததாகவும் ராமாயணத்தில் படிக்கிறோம். இந்தக் கலியில் விசுவாமித்திரர் இருந்திருந்தால் அவருடைய யாகத்தைக் கெடுக்க ஸுபாஹு, மாரீசனே வேண்டியிராது. அவர் மூளை கெட்டுப் போய்அதனுள்ளேயே அசுரப் பிரவர்த்தி குடி கொண்டிருக்கும். அவர் யாகம் செய்யவே எண்ணியிருக்க மாட்டார். ஜனங்களின் மூளையிலேயே அசுரன் புகுந்துவிட்ட இந்தக் கலியில் யாரை ஸம்ஹாரம் பண்ணுவது? யாரை விட்டுவைப்பது? எனவே அசுர ஸம்ஹாரத்துக்கான வைஷ்ணவ அவதாரங்கள் இப்போது வேண்டாம் என்று பரமேசுவரன் கருதி ஞானோபதேசத்துக்காகத் தாமே ஒரு பிராமணக் குடும்பத்தில் அவதரித்தார்.

சம்புவாக உட்கார்ந்திருந்த மூர்த்தி சங்கரராகச் சுற்றும் மூர்த்தியாயிற்று. எவ்வளவுக்கெவ்வளவு உட்கார்ந்திருந்தாரோ, அவ்வளவுக்கவ்வளவு சஞ்சாரம் செய்தார்; எவ்வளவுக்கெவ்வளவு மௌனமாக இருந்தாரோ, அவ்வளவுக்கவ்வளவு பேசினார், உபதேசித்தார், வாதம் செய்தார், பாஷ்யம் செய்தார்.

ஸ்ரீ ஆதி சங்கரரின் மகிமை, அவருக்கு முன்பிருந்த எழுபத்திரண்டு மதங்களில் எதுவுமே அவருக்குப் பின்பு பாரத தேசத்தில் இல்லாமற் போனதுதான். அவர் கண்டனம் செய்த சாங்கியம், வைசேஷிகம் போன்ற சில மதங்களைப் பற்றிப் புத்தகங்களிலிருந்துதான் தெரிந்து கொள்ள முடிகிறது. இவற்றை நடைமுறையில் பின்பற்றுகிற எவரையுமே காணோம். காபாலிகம், வாமாசார சாக்தம் போன்ற கோர மதங்களைப் பற்றி பழைய இடிபாடு (Ruins) புதைபொருள் இவற்றிலிருந்தே தெரிந்துகொள்கிறோம். வேத கர்மானுஷ்டானத்தைச் சொல்லாமல் ஆத்ம குணங்களை மட்டும் சொல்லும் ,புத்த மதம் முதலிய சில மதங்களை மற்ற நாடுகளுக்காக விட்டு வைத்திருக்கிறார் ஸ்ரீ சங்கர பகவத்பாதர். அவையும் நம் நாட்டில் அவர் காலத்துக்குப் பின் இல்லாமல் போயின. சொற்ப காலத்துக்குள் தத்துவம் ஒன்றையே அடிப்படையாக வைத்து மற்ற மதங்களையெல்லாம் ஜயித்து அத்வைதத்தை ஆசாரியார்கள் நிலைநாட்டியதைப் போன்ற மகத்தான காரியத்தைச் செய்தவர் உலகில் எவருமே இல்லை.

ஸ்ரீ சங்கர பகவத் பாதர்களுக்குப் பிற்பாடு நம் நாட்டில் வேறு சம்பிரதாயங்கள் ஏற்பட்டாலும் ஸ்ரீ சங்கரர் ஸ்தாபித்த அத்வைத மதம் போய்விடவில்லை. இன்றும் அத்வைதிகள் இருக்கிறோம்.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்

# இரண்டே வருடங்களில் விற்பனையில் முதல் இடம்

# JOHNSON®

# மிக்ஸர் கிரைண்டர்

25 வருடத்திற்கு மேற்பட்ட அனுபவமும், இந்தியாவிலே சமையலறைச் சாதனங்களில் ஏராளமான வகைகளும் கொண்ட ஜான்சனின் சீரிய படைப்பு ஜான்சன் மிக்ஸர் — கிரைண்டர். எங்கெங்கும் அறிமுகப் படுத்தினதுல் ஐயமின்றி தலை சிறந்ததென இரண்டே வருடங்களில் பீடு நடை போடுகிறது.

ஏன் எனக் கேட்பின் :

---

இலவசம் ! தனி எவர்சில்வர் கிண்ணம்!
உலர்ந்த அரவைக்கென தனியான எவர்சில்வர் கிண்ணமிருப்பதால் மசாலாக்களின் மணமும், ருசியும் மில்க் ஷேக்குகளில் கலக்காமல் பாதுகாப்பு அளிக்கிறது.



---



அதிக சுகாதாரம் பாகங்களை எளிதாக கழட்டும்படி தயாரிக்கப் பட்டிருப்பதால் நீங்கள் துப்புரவாகக் கழுவ முடிகிறது. உணவுப் பண்டங்களின் துகள்கள் உள்ளே நின்று விடும் சந்தர்ப்பம் இல்லை.

---

முழுமையான பாதுகாப்பு. பிளேட் பாகங்கள் இரு கிண்ணங்களிலும் உறுதியாக இணைக்கப் பட்டிருப்பதால் இயக்கத் தில் பிளேட் பறந்து விடாமல் பாதுகாப்பு அளிக்கிறது.



---



கன ரக ஓட்டம் அதிக உறுதியான 450 வாட் மோட்டார் நமது இந்திய சமையலுக்கென்றே சிறப்பாக அமைக்கப் பட்டிருக்கிறது. 45 நிமிடங்கள் நிறுத்தாமல், தடையின்று ஓட்டலாம்.

---

மற்ற சிறப்பு அம்சங்கள்:

- மோட்டார் குளிர்ச்சியாக இருப்பதற்கென தனியான காற்றோட்டம்
- சீரிய கலவை மற்றும் அரவைக்கென மேம்படுத்தப்பட்ட பிளேட் அமைப்பு
- ஒரு வேகத்திலிருந்து மற்றொரு வேகத்திற்கு செம்மையாக மாற்ற இஞ்சர் ஸ்விட்ச்
- ஒரு வருடத்திற்கு உத்திரவாதம் ஜான்சன்

**JOHNSON®**

## இயக்கத்திலும், ஆற்றலிலும் இணையிலாச் சிறப்பு கொண்டது

JOHNSON
MIXER-GRINDER

BE-6001A

மனிதன் ஏற்படுத்திய பஞ்சம் அதைவிடக் கொடுமையாக இருக்கிறதே!

மூன்று நாட்கள் நடந்த நிகழ்ச்சிகளில் அவள் மனம் வெகு தூரம் பாதிக்கப் பட்டிருந்தது.

அவளது நினைக்கும் சக்திகூடச் சிறிது குறைந்து இருப்பதை அவள் உணர்ந்தாள்.

எவ்வளவு உன்னதமான இடங்களில் இருக்க வேண்டியவள்.

இப்படி ஒரு அடிமைப் பெண்ணாக நாட்டை விட்டுக் கடத்தப்படுகிறாளே! இந்த அக்கிரமம் வேறு எங்காவது நடக்குமா?

ஆமாம், இந்த ஏற்றுமதி விவகாரங்களை யாராவது கவனிக்க வேண்டாமா? இன்னும் விஜயநகரக்காரர்கள்தானே இந்தச் சீமைக் கெல்லாம் அதிபதி!

## இந்த வாரடீ.வி.சினிமா

**விக்கிரமாதித்தன்**

எம். ஜி. ஆர்., பத்மினி, பி. எஸ். வீரப்பா நடித்த 'விக்கிரமாதித்தன்' படம் இந்த வாரம் (10-5-81) சென்னை டீ. வி.யில் திரையிடப்படுகிறது. (எதிர்பாராத கடைசி நேரத்தில் மாற்றம் இராது என நம்புவோம்.)

இந்தப் படத்தைப் பற்றிய பழைய பத்திரிகை விமர்சனங்களைத் தேடினேன்.

குமுதம் நவம்பர் 15, 1962 இதழில் ஒரு பக்கம் பத்மினியின் அழகான புகைப் படம் போட்டிருக்கிறார்கள். எதிர்ப் பக்கத்தில் வந்த விமர்சனம் இவ்வளவே தான்:

" "தாய்நாடு" என்ற பிரசாரப் படம் இத்துடன் காட்டப்பட்டது ஒரு புதுமையான முயற்சி."

விகடனில் விக்கிரமாதித்தன் விளம்பரம் மட்டுமே வந்திருக்கிறது. கல்கியில் அது கூட இல்லை! -சிக்கி

புகைப்படம் உதவி: சிந்தாமணி பிலிம்ஸ்



திரும்பியபோது தென்னஞ் சோலைக்கு நடுவில் திருவல்லிக்கேணியின் கோபுரம் தெரிந்தது.

'கடவுளே! இவைகளை நீ கண்ணால் பார்த்துக் கொண்டிருக்கிறாயா?' என்றுகேட்டாள் அவள். மனம் எந்த வித இயக்கமும் இல்லாமல் சோர்ந்து விழ.

காதுகளில் கடக் கடக் கடக் கடக் என்ற குதிரை ஓசை மட்டும் இடையிடையே கேட்டுக் கொண்டிருந்தது.

இப்போது ஆபத்தில் சிக்கிய காரணத் தால் அந்த நினைவு அடிக்கடி வருகிறது.

அந்த வீரனாவது அவளைக் காப்பாற்ற வருவதாவது!

இதற்குள் அவன் இறந்திருக்க வேண்டும்.

அவன் பெயரைக் கேட்டுக் கொள்ள மறந்து விட்டோமே! எவ்வளவு பெரியதவறு!

அதுகூடப் பெரிதில்லை.

தனது பெயரை ஏன் கங்கா என்று சொன்னோம்? இறந்து கொண்டிருக்கும் ஒருவனிடம் அப்படிச் சொல்லலாமா?

என் உண்மைப் பெயர் தெரிந்தால் அவன் சந்தோஷமாக இருக்க மாட்டானா?

அவள் யோசனை செய்து கொண்டிருக்க,

திடீரென்று அரவங்கள் கேட்டு மெள்ளத் திரும்பிப் பார்த்தாள்.

ஆங்கிலேயர்கள் பலர் அவசரம் அவசர மாகக் கடற் கரைக்கு மூட்டை முடிச்சுக் களுடன் வந்து கொண்டிருந்தார்கள்.

கப்பலில் ஏறித் தங்கள் தாய் நாட்டுக்குச் செல்லவே அவர்கள் வந்திருக்கிறார்கள்!

வாலிபர்களும் நடுத்தர வயதுக்காரர்களும் நிறைந்த அந்தக் கூட்டத்தில் ஒருத்தனது பேச்சு மட்டும் சிறிது வெண்கல இழையுடன் எடுப்பாக இருந்தது.

அவளுக்கு ஆச்சரியம் ஏற்பட்டுத் திரும்பிப் பார்க்க,

கும்பலில் அந்தக் குறிப்பிட்ட ஆளை அவள் கண்டுகொள்ள முடியாதபடி மற்றவர்கள் குறுக்கே வந்து கொண்டிருந்தார்கள்.

கவர்ணமுகி அது யார் என்று குழம்பிக் கொண்டிருக்கும்போது,

அந்தக் கும்பல்காரர்கள் தங்களுக்குச் சற்று எட்டத்தில் அந்த அடிமைக் கோஷ்டி இருப்பதைப் பார்த்து வேடிக்கை பார்க்க அவர்களை நோக்கி வந்தார்கள்.

கும்பலில் சற்றுஉச்சமான குரலில்பேசிய வன் ட்ரேக் ராஜர்.

இருபத்தெட்டு வயது இளைஞன்.

வடித்த முகவாயும், கூர்மையான மூக்கும் உள்ளவன்.

கண்களில் நீலத்தை ஒட்டிச் செல்வரி.

அதிகப் படிப்பு இல்லாமல் லண்டனிலிருந்து ஸ்டுவர்டாகக் கப்பல் ஏறியவன் அவன்.

நாகப்பட்டினம் அருகில் அடித்த புயலில் தப்பித்துக் கரை ஏறியவன்.

பிறகு ஐரோப்பிய வியாபாரிகளிடம் ஏவல் வேலை செய்து,

மெள்ளமெள்ளத்தானே தனக்கு ஒரு வர்த்தக வழியை ஏற்படுத்திக் கொண்டவன்.

இப்போது கையில் சேர்த்த பத்தாயிரம் பவுனுடன் தனது தாய் நாட்டுக்குத்திரும்பிக் கொண்டிருந்தான்.

அங்கே அவனது ஏழ்மையான பெற்றோர்களும் சகோதரிகளும் அவன் வருகைக்காகக் காத்திருந்தார்கள்.
ஒவ்வொரு வியாபாரியும் இங்கிலாந்துக்கு எடுத்துச் செல்லும் கனத்த தொகைகளை ஒப்பிட்டால், இவன் எடுத்துச் செல்வது பெரிய தொகையே அல்ல.
''டேய், டேய்! இந்தப் பக்கம் பெண்கள்'' என்றான் காலின்ஸ் என்ற இளைஞன்.
ராஜர் திரும்பினான்.
அதுவரை எலும்பும் தோலுமாகச் சிறுவர்களையும், ஆடவர்களையும் பார்த்த பிறகு இந்தப் பெண்கள் பகுதி சற்று வளமையுடன் தெரிந்தது.
''பெண்களுக்கு மட்டும் இந்தத் தோல் வியாபாரிகள் நல்ல உணவு கொடுக்கிறார்கள்'' என்றான் காலின்ஸ்.
தோல் வியாபாரம் என்று குறித்தது அடிமை வியாபாரம்.
''ஏனெனில் அவங்களை ஆசைநாயகியாக விற்க வேண்டியிருக்கே! அதனால் அவங்க தோற்றத்தைச் சரியாகப் பாதுகாக்க வேண்டாமா?'' என்றான் ஹம்மாண்ட்.
''நாமும் ஆளுக்கு ஒரு பெண் வாங்கிக் கொண்டு போகலாமா?'' என்றான் காலின்ஸ்.
''வீட்டை விட்டுத் துரத்துவார்கள்!'' என்றான் ஹம்மாண்ட்.
''பெற்றோர்கள்தானே! இதே அடிமைகளை நாலு மடங்கு விலைக்கு விற்றுப் பணத்தைக் காட்டினால் ஆவென்று வாயைப் பிளப்பார்கள்'' என்றான் ஜேம்ஸ் மில்.
ராஜர் இதற்குள் பெண்கள் கூட்டம் ஒவ்வொன்றாகப் பார்த்து, கோயன்ஸின் கூட்டத்துக்கு வந்திருந்தான்.
காந்தம் போல் விண் என்று பார்வை இழுபட, ''மை காட்'' என்று கத்தினான்.
மற்றவர்கள் ஆச்சரியமாகப் பார்க்க, ராஜர் இரண்டே தாவலில் அந்தக் கூட்டத்தின் பக்கம் நின்றான். ''ஹேய்!''
ஆறு அடிமைப் பெண்களும் திரும்பிப் பார்த்தார்கள்.
சுவர்ணமுகி அரைக் கணம் அவனைப் பார்த்துப் பார்வையைக் கீழே இறக்கினாள்.
''ஹேய்'' என்றான் பரிச்சயம் ஆனவன் போல். திரும்பிய அவள் விசேஷமாக ஒரு முறை பார்த்துவிட்டு மீண்டும் திரும்பினாள்.
ராஜர் என்னென்னவோ சொல்ல விரும்பினான். முன்யோசனை தடுத்தது.
பிறகு இந்தக் கூட்டத்தின் வியாபாரி கோயன்ஸ் என்று அறிந்து அவனைத் தேடிக் கண்டு பிடித்தான். ''மிஸ்டர்! அதோ அந்தப் பெண் இருக்கிறாளே, அவளை எனக்கு விலைக்குத் தரமுடியுமா?''
கோயன்ஸ் அவனை ஏற இறங்கப் பார்த்தான். ''தரேன்''
''எத்தனை பணம்?''
''பணம் வேண்டாம். பவுன் கொடு.''
''எவ்வளவு?''
''ஐநூறு!''
''ஐநூறு!'' திறந்தவாய் திறந்தபடி கிடந்தது. கண்கள் மருகி நின்றன.
கோயன்ஸ் முகத்தைத் திருப்ப, ''இதோ தருகிறேன்'' என்றான் ராஜர், பரபரத்த தீர்மானமுடன்,

# சினிமா சிரிமா!

உங்களுக்கு வயது 21? அப்படியானால் கவனியுங்கள்! ஜூன் மாதம் முழுவதும் 21ம் பக்கம் 21 வயதுக்காரர்களுக்குச் சொந்தம்.
இந்த வயதில் சினிமா பார்க்காதவர் யார்? பார்த்துவிட்டு ஜோக் அடிக்காதவர்தான் யார்?
மே 15 தேதிக்குப் பிறகு புதிதாக ரிலீஸ் ஆன ஒரு சினிமாவை வைத்து ஜோக் எழுதி அனுப்புங்கள். பிரசுரமானால் சன்மானம் உண்டு. உறையின்மேல் ''சினிமா, சிரிமா!'' என்று குறிப்பிடவும். ஒருவர் இரண்டு ஜோக்குகளுக்கு மேல் எழுதக் கூடாது. திருப்பி அனுப்புதல், கடிதப் போக்குவரத்து இல்லை.

---

''நான் அறுநூறு தரேன்'' என்று ஒரு காத்திரமான குரல் அவனை உலுக்கியது. திரும்பினான்.
ஃபிரான்ஸிஸ் டே உறுதியான முகத்துடன் நின்று கொண்டிருந்தான்.
கோயன்ஸ் டேயை நோக்கித் திரும்பினான்.
''நான் எழுநூறு'' என்றார் ராஜர்.
கோயன்ஸ் ராஜரை நோக்கித்திரும்பினான்.
''எண்ணூறு.''
''தொள்ளாயிரம்.''
''ஆயிரம்.''
''இரண்டாயிரம்.''
டேக்குக் கோபம் வந்தது.
''மூவாயிரம்.''
''நான் நாலாயிரம்.'' ராஜர் முகத்தில் ஒரு கண்டிப்பு ஓடியது.
''ராஜர் இது வேண்டாம். ஏலம் சூதாட்டம் மாதிரி!'' என்று காலின்ஸும் நண்பர்களும் நெரித்தார்கள்.
''ஐயாயிரம்!'' என்றான் டே. அவன் முகத்தில் கடுகடுப்பு. கண்ணில் ஒரு வெறி.
''ஆறாயிரம்.''
''ஏழாயிரம்.''
''எட்டாயிரம்.''
''ஒன்பதாயிரம்.''
''பத்தாயிரம்.''
டேக்குக் கோபம் கூடிக் கொண்டே வந்தது. ராஜர் பத்தாயிரம் என்றதும் ஆத்திரம் அள்ளி வரக் கண்கள் ரத்தமாக எரிய,
''போதும். இனிமே ட்யூயல்! வா, ட்யூயலுக்கு'' என்று கத்தினான். (தொடரும்)



# ரசிகமணி ரசித்த மணிகள்

— மீ.ப.சோமு —




டி.கே.சி. எங்கே பேசினாலும் எப்போது பேசினாலும் சில நிலையான கொள்கைகளை அழுத்தமாகவே வற்புறுத்துவார். வன்மையாகஇருந்தாலும் நையாண்டியாக இருக்கும். ''பள்ளிக்கூடமா, தீயை வை!'' என்பார். ''யூனிவர்ஸிடிகளை இடித்து நொறுக்கு'' என்பார். ''அறிவு கெட்டுப் போகாமல் இருக்க வேண்டுமா? பள்ளிக்கூடத்துக்குப் போகாதே. பல்கலைக் கழகத்தில் நிழலுக்குக் கூட ஒதுங்காதே!'' என்பார். பட்டதாரிகளும், வித்வான்களும், ''ஸ்காலர்களும்'' புலவர்களும், வாத்தியார்களும் அவரிடம் அகப்பட்டுக் கொண்டால் வந்தது வினை!

இப்படியெல்லாம் ஆயுள் முழுவதும் அவர் விடாமல் சொல்லி வந்ததற்குக் காரணம், நமது கல்வித் திட்டத்தில் விஞ்ஞானத்தையோ இலக்கியத்தையோ மொழியியலையோ கற்பிக்கிற முறை தவறானது என்று

# தமிழ் கலைச் சொற்கள்

அவர் கண்டார். கல்வி என்றால் அது ஆனந்த மயமாக இருக்க வேண்டும். அதற்கு மாறாகப் பிள்ளைகளைச் சித்திர வதை செய்கிறது நம்முடைய பாடத் திட்டம் என்று வேதனைப் பட்டார் டி. கே. சி. இதனால் தமது பேரக் குழந்தைகளைப் பள்ளிக்கூடத்துப் பக்கமே அனுப்பவில்லை அவர்!

டி.கே.சி. விஞ்ஞானஅறிவு நிரம்பியவர். எதையும் பகுத்தறிவு கொண்டு ஆராய்ந்து பார்க்கக் கூடியவர். விஞ்ஞானத்தைத் தாய் மொழியிலேயே சொல்லிக் கொடுக்க வேண்டும் என்பதில் தீவிர ஆர்வம் உடையவர். எனினும் கலைச் சொற்களை ஆக்குவது பற்றிச் சில தெளிவான கருத்துக்கள் அவருக்கு உண்டு. மிகவும் Progressive முன்னேறிய கருத்துக்கள் அவை. அவருடைய கடிதங்கள் சிலவற்றிலிருந்து சொல் ஆக்கம் பற்றிய அவருடைய கருத்துக்களைப் பொறுக்கி எடுத்துத் தொகுத்திருக்கிறேன். வாக்கியங்கள் அனைத்தும் டி.கே.சி.யின் மொழிகளே. எவ்வித மாற்றமும் இல்லாமல் அப்படி அப்படியே தருகிறேன்.

“சையன்ஸ் சம்பந்தம் இல்லாதவர்களைச் சொல்லாக்கக் கமிட்டியிலே போடுவதால் என்ன ஆகிறது? இவர்களுக்கு ஒரே நோக்கம் வட மொழியை விருத்திபண்ணிவிட வேண்டும், அல்லது தமிழை விருத்தி பண்ணி விட வேண்டும். சையன்ஸ் எப்படியேனும் போகட்டும் என்றுதான் எண்ணுகிறார்கள்! விஷயந்தான் சையன்ஸ் போதனையில் முக்

இயம் என்று எண்ணி விட்டால் வார்த்தைகளின் ஆதிக்கம் முன்னணிக்கு வராது.

மேல் நாட்டான் ஒரு பிள்ளையைப் பெற்றான். அதற்கு ஏதோ 'விக்டர்' என்று பெயரிட்டான். நாமும் அவனை 'விக்டர்' என்று சொல்லிவிட்டால் தமிழ் கெட்டா போகும்? போகாது.

அது போல, உடம்பைப் பிரித்துப் பார்த்தான். ஒரு உறுப்புக்கு 'மால்பீஜியன்காப்ஸியூல்' என்று ஏதோ பெயரிட்டான். நாமும் அந்தப் பெயரையே இட்டு அழைத்தால் கேடு ஒன்றும் விளைந்து விடாது. நாளடைவில் வேறு பெயர் இட்டு நம்மவர்கள் அழைக்க ஆரம்பித்தால் அதைச் சேர்த்துக் கொள்கிறது. ஆனாலும் மேல் நாட்டு சையன்ஸோடு கலந்துகொள்வதற்கு மேல் நாட்டார் நாமகரணம் செய்தபடியே பெயர் வைத்துக் கொண்டால் பிரயோஜனமாய் இருக்கும். இதை 1940லிருந்து சொல்லி வருகிறேன். இதைப் பற்றி யூனிவர்ஸிடி கமிஷன்முன் வாக்கு மூலம் முன்னமேயே கொடுத்திருக்கிறேன். பழைய ரிக்கார்டுகளைப் பார்த்தால் தெரிய வரும். ஆனாலும் கலைச் சொல் ஆக்கக்காரர் உடும்புப் பிடியை விடப் போவதில்லை. தமிழை வைத்தோ வட மொழியை வைத்தோ தொங்கிக் கொண்டே இருக்கத் தயார் கடைசி வரையும்! ஆங்கிலச் சொற்களையே வைத்துக் கொள்ளலாம் என்று ஏற்பட்டு விட்டால் எல்லாம் எளிதாய்ப் போய் விடும். அதன் பிறகு கலைச் சொற் கழகம் என்று ஒன்று வேண்டாமென்றல்லவா ஆகி விடும்! பெரிய விபத்தல்லவா அது!

மோட்டார் டிரைவர்களும் கிளீனர்களும் கலைச் சொற் கழகத்தின் உதவி இல்லாமல் மோட்டாரை ஓக்கிட்டு விடுகிறார்கள், ஓட்டி விடுகிறார்கள்! நம்மை விட்டு வார்த்தை மோகம் என்று ஒழியுமோ தெரியவில்லை. அது ஒழிந்தால்தானே சையன்ஸ் கைக்கு வரும்? முன்னேறிய நாடெல்லாம் சையன்ஸை வாழ்க்கைக்கும், பொருள் விருத்திக்கும், சாலைத்தொழில்களுக்கும் உபயோகப்படுத்திக் கொண்டிருக்கும்போது, நாம் சௌகரியமாக சாவகாசமாகப் பிரதி பதங்களைத் தேடிக் கொண்டிருக்கிறோம்! பெயர் வைக்க மறந்து போனதால் பதினெட்டு வயதுப் பையனைத் தொட்டிலிலேயே கிடத்தி வைக்கிற கணக்குத்தான்! பிரதி பதங்களைச் சரிவரக் கண்டுபிடிக்க நூறு வருஷம் ஆகலாம். அதுவரை கைத்தொழில்களையும், தொழிற்சாலைகளையும், ரசாயன ஆராய்ச்சிகளையும் நிறுத்தி விட வேண்டியதுதானா?

வார்த்தைகளுக்கு என்று அலந்து நிற்கிற காரியம் பரிதாபமான காரியமே! சூரியனுக்குத் தக்க பிரதி பதம் கிடைக்காமல் போனால் அப்பாவிகள் கண்ணை இறுக மூடிக் கொள்ளுவார்கள்! பாஷை உண்டாவதற்கு முன்னும் ஆதி மனிதன் சூரியனை இனங் கண்டு அனுபவித்துக் கொண்டான்! ஏன், நம்முடைய கண் முன்னாலேயே பட்சிகள் சூரியனை இனங் கண்டு கொள்கின்றன. சந்தோஷத்தில் பாடவும் செய்கின்றன. அகராதிக்காக ஆனந்தமாகப் பாடுவதைப் பறவைகள் ஒத்திப் போடவில்லை! நம்முடைய கலைச் சொல் ஆக்கக்காரர் என்றால் கண்ணை மூடிக் கொண்டு 'கப்சிப்' என்று இருந்து விடுவார்!

சையன்ஸ் சம்பந்தப்பட்ட உண்மைகள் தான் எத்தனை! எந்திரங்கள்தான் எத்தனை! என்ன பெயரை வைத்தாவது அவைகளை நமக்கு ஆக்கிக் கொள்ள வேண்டியதுதானே?

பெயர் தமிழ்ப் பெயராக இல்லை என்ற காரணத்தால் தின்னாமல் விடுவதா, கையில் உள்ள அல்வாவை!

நேருக்கு நேராக, வார்த்தைகளைக் கொண்டு அல்ல, படித்தால்தான் படிப்பு. அப்படிப் படிப்பு ஏற்பட்டால் பள்ளிக்கூடத்தில் பிள்ளைகள் ஒரு மணி நேரத்துக்கு மேல் இருந்து தொலைக்க வேண்டாம்!

'டெக்ஸ்ட் புக்'குகள் சையன்ஸைச் சொல்லிக் கொடுத்து விடுமா? உடற்கூறுகள் சம்பந்தமாக மாணவர்கள் 'டெக்ஸ்ட் புக்'குகளை வாசித்துக் கஷ்டப்படுவதை நான் பார்த்திருக்கிறேன். நேருக்கு நேராகக் கற்றாலோ வெகு சுலபம்! தலை, கண், மூக்கு என்னும் உறுப்புக்கள் கண் முன்னும், பிறகு மனக் கண் முன்னும் நின்று விட்டால், எந்தப் பதமும் அவைகளில் லகுவாய் ஒட்டிக்கொள்ளும். தமிழோ, வட மொழியோ, லத்தீனோ, கிரீக்கோ எந்தப் பதமும் ஒட்டிக் கொள்ளும். உள்ளத்தில் நில்லாத பொருளுக்குத் தமிழ்ப் பெயரையே கொடுத்தாலும் பிரயோஜனம் இல்லை. நம் பள்ளி ஆசிரியர்களுக்கும், ஆசிரியராய் இனி அமரப்போகும் மாணவர்களுக்கும் விஷய அனுபவம் என்பது இல்லாத போது, வார்த்தையை வைத்துக்கொண்டு என்ன செய்வது என்றுதான் கேட்கிறேன்.

பள்ளிக்கூடங்கள் சையன்ஸையே கற்பிக்கவில்லை. கற்பிப்பது எல்லாம் அப்பாவி மாணவர்களின் மண்டைக்குள் வார்த்தைகளைத் திணிப்பதுதான். எல்லாம் அறிவை, பகுத்தறிவைக் கெடுக்கிற காரியம்! பெயர்களையும் சூத்திரங்களையும் பாராமல் படித்து அப்படியே பரீட்சைப் பேப்பரில் கொட்டி விடுகிற காரியம்!

எல்லாத் தவறும் எங்கே இருக்கிறது என்றால், அடிப்படையிலேயே இருக்கிறது! நேர்முகமான கல்வி முறை இல்லாததால்தான் இத்தனை வினையும்! அது வந்துவிட்டால் கலைச் சொல் ஆக்கம் பயன்படும். அதுவரை பயனை எதிர்பார்த்தால் ஏமாற்றந்தான்!"*

# ஆரோக்கியம், ஆனந்தம்,
# ஒன்றுக்கொன்று ஆதாரம்




உங்கள் குடும்பத்தினருக்கு இன்சுவைமிக்க போர்ன்விடா வழங்குங்கள். போர்ன்விடாவில் கோகோ, மால்ட், பால் மற்றும் சர்க்கரையின் நற்பண்புகள் நிறைந்துள்ளன.

இப்போது! பெரும் சேமிப்பு ஒரு முழு ரூபாய்
ரீ:பில் பேக்குடன்

கேட்பரீஸ்
**போர்ன்விடா**
அளிப்பது அத்தனையும் நலம்

CBM 4617 TM



# பழைய முகங்கள்-புதிய நிழல்கள்!

**29.3.81**

அக் கல்யாணம் நல்லபடியாக நடக்கத் தன்னாலான உதவிகளைச் செய்ய வேண்டியது இருக்க, தானே முன்னால் நின்று இதை நிறுத்த வேண்டி வந்துவிட்ட தன்னுடைய நிலைமையை எண்ணி, மிகவும் வேதனைப்பட்டாள் வித்யா!—

இவ்வளவு நாளும் எங்கேயும் போகாமல், யாரோடும் ஒட்டாமல் ஒதுங்கியே இருந்து விட்டதைப் போலவே அப்போதும் கூட இருந்திருக்கக் கூடாதா? என்று மிகுந்த வருத்தத்தோடு நினைத்துக் கொண்டாள்.

''இந்துவைப் பெண் பார்க்க வருகிறார்கள். உன் மன்னி மிகவும் பயப்படுகிறாள். நீயும் வந்தால் அவளுக்கு ரொம்ப ஆறுதலாக இருக்கும். நீ அவசியம் வரணும் வித்யா!'' என்று அவளை மிகவும் வற்புறுத்திய அவள் அண்ணன் ராகவன் பேச்சைத் தட்ட முடியாமல் இங்கே வந்து 'இப்படியொரு சிக்கலில் அகப்பட்டுக் கொண்டோமே' என்று நினைத்தாள்!—

பெண் பார்க்க வந்தவர்கள் நேரிடையாகவே தங்கள் சம்மதத்தைத் தெரிவித்து விட்டார்கள்!

மாப்பிள்ளைப் பையனும் பார்க்க லட்சணமாய் இருக்கிறான். இந்துவுக்கு ஏற்ற ஜோடி. நல்ல சிவப்பு. ஆள் நல்ல வாட்ட சாட்டமாய் இருந்தான். தனியார் கம்பெனி ஒன்றில் நாலு இலக்க சம்பளத்தில் நல்ல வேலையிலிருந்தான். கூட வந்திருந்த மனிதர்களும் சுபாவத்தில் நல்லவர்களாகவே தோன்றினார்கள். போதாதா என்ன?

ராகவனும் கல்யாணியும் இவ்வளவு நாட்கள் தேடியதற்கு ஒரு நல்ல சம்பந்தம் கிடைத்ததே என்று மகிழ்ந்து போய் இருந்தார்கள்.

அந்த மகிழ்ச்சியில்—

எட்டாயிரம் ரூபாய் வரதட்சிணையும், இரண்டாயிரம் ரூபாய் மாப்பிள்ளை டிரஸ் ஸும், இருபது பவுன் நகையும் மற்ற சீர் வரிசைகளும் எதுவுமே பெரிதாகத் தோன்றவில்லை அவர்களுக்கு!

எல்லாவற்றுக்குமே சம்மதித்தாயிற்று!

இந்து ஏறக்குறைய இந்தக் கல்யாணமே முடிந்து விட்டாற் போல சந்தோஷமாக இருந்தாள்.

இந்த நிலையில்—

எப்படியாவது இந்தக் கல்யாணத்தை நிறுத்திவிட வேண்டும் என்று வித்யாவின் மனம் மட்டும் ஓயாமல் புலம்பிக்கொண்டே இருந்தது.

இந்துவைப் பெண் பார்க்க வந்திருந்த 'அவனை'ப் பார்த்ததுமே வித்யாவுக்குப் 'பளிச்'சென்று நினைவுக்கு வந்து விட்டது.

அந்த ஒரு கணத்தில் அவள் உடல் எங்கும் 'குப்'பென்று வியர்வை பொங்க— உடம்பும் மனமும் 'படபட'வென்று துடிக்க அவள் தன் மூக்குக் கண்ணாடியைக் கழற்றித் துடைத்து மீண்டும் அணிந்து கொண்டு அவனை நன்றாகப் பார்த்தாள்!

அவன்தான்!—

அவனேதான்!—

வித்யாவுக்குச் சந்தேகமே இல்லை!—

அவன் நினைவுகள் 'சட்'டென்று அவளிடம் இருந்து பிரிந்து ஓடின!—

சென்ற மாதத்தில் ஒரு நாள் அவள் கம்பெனியின் 'புரொடக்டிவிடி கவுன்ஸிலின்' கூட்டம் நகரின் நட்சத்திர ஹோட்டல் ஒன்றில் ஏற்பாடாகி யிருந்தது.

கம்பெனியின் முக்கியஸ்தர்களும் எக்ஸிகியூட்டிவ்களும் மற்றும் உயர் மட்ட அதிகாரிகள் பலரும் இதில் அவசியம் கலந்து கொள்ளுமாறு அழைக்கப்பட்டிருந்தார்கள்.

வித்யாவும் அந்த மீட்டிங்கில் கலந்து கொள்ளச் சென்றிருந்தாள்.

குறிப்பிட்ட நேரத்துக்குச் சற்று முன்னதாகவே வந்து விட்டதால் அவள் வரும் போது மீட்டிங் ஹால் காலியாக இருந்தது.

மாடியில் இருந்த அந்த அறைக்கு வெளியே நீண்ட வராந்தாவின் கைப்பிடிச் சுவர் ஓரம் நின்று கீழே நிற்கிற கார்களையும் நடமாடுகிறவர்களையும் பார்த்தபோது அந்தக் கோணத்தில் பார்ப்பது ஒரு விநோதமான அனுபவமாக இருக்கவே அவள் அங்கேயே நின்று கொண்டிருந்தாள்.

அப்போதுதான் இது நடந்தது!—

நாகரிகமாக உடை அணிந்த ஒரு வாலிபனும் அவனுக்குப் பின்னால் அவன் இடுப்பை இறுக்கமாகக் கட்டிக் கொண்டு ஏறக்குறைய அவன் மேல் சாய்ந்த வண்ணம் ஒரு இளம் பெண்ணும் ஸ்கூட்டரில் வந்து இறங்கினார்கள்.

அவன்—

நல்ல சிவப்பாயிருந்தான். அழகாகவும் இருந்தான். நன்றாக உடுத்தி யிருந்தான். அவன் ஸ்கூட்டரை ஓட்டிவந்ததும் அதை நிதானமாக நிறுத்தி அலட்சியமாக இறங்கியதும் — எல்லாமே அவனை ஓரளவுக்கு வசதியானவன் என்றே எண்ண வைத்தன!

தன்னோடு வந்த இளம் பெண்ணின் இடையில் கை போட்டு வளைத்துத் தன்னோடு சேர்த்துக் கொண்டு அவன் நடந்தான்.

அந்தப் பெண்ணை நன்றாகப் பார்த்தாள்.

'சட்'டென்று நினைவுப் பொறியொன்று அவள் மூளையில் தட்டியது!

ராதையல்லவா!

அவளேதான்!

தன் கம்பெனியில் ஸ்டெனோவாக இருக்கும் அந்தப் பெண்ணை அவன் ஓரிரு முறை பார்த்திருக்கிறான்.

ராதைக்குக் காதலா?

அவன் பேர் என்னவாக இருக்கும்?-

கண்ணனோ?.... குரோட்டன்ஸ் மறைவில் அவர்களது காதல் லீலைகள்....!

ராதை நல்ல பெண்.

தனக்கு ஏற்ற மாதிரி ஒரு நல்ல பையனைத்தான் தேர்ந்தெடுத்திருக்கிறாள். பையன் வசதியானவனாகவும் தெரிகிறான். அதிர்ஷ்டசாலிதான் ராதை!

என்று அவன் எண்ணங்கள் ஓடிக் கொண்டிருந்த வேளையில் ஒவ்வொன்றாக அவன் கம்பெனிக் கார்கள் உள்ளே நுழைந்து, அரை வட்டமடித்து போர்டிகோவுக்குள் நுழைந்து மீள்வது தெரியத் தொடங்கிற்று.

அடுத்த அரை மணியில் மீட்டிங் துவங்கி விட்டது.

அதன் பிறகு வித்யாவுக்கு வெளியே பார்த்த காட்சியும் அந்த நினைவுகளும் மறந்து போயின!

அன்றைக்கு — அங்கே — ராதையுடன் பார்த்த அதே வாலிபனை இன்றைக்கு, இந்துவைப் பெண் பார்க்க வந்த மாப்பிள்ளையாகப் பார்த்த போது அவன் மனத்தில் இனம் புரியாத ஆத்திரமும் கோபமுமே பரவியது.

எப்படியாவது இந்தக் கல்யாணத்தை நிறுத்திவிடவேண்டும்! நன்றாகத் தெரிந்தே இந்துவைப் பள்ளத்தில் தள்ளிவிடக் கூடாது!

வித்யாவின் மனத்துக்குள் இந்த எண்ணமே திரும்பத் திரும்ப ஒலித்துக் கொண்டிருந்தது.

''என்ன வித்யா? நான் கூப்பிடறது கூடக் காதிலே விழாம அப்படி என்ன ஆழமான யோசனை? — பையனைப் பார்த்தாயல்லவா? உன் அபிப்பிராயம் என்ன? பையன் இந்துவுக்கு நல்ல ஜோடிதானே?'' என்ற ராகவனின் குரல் அவன் நினைவைக் கலைத்து விட்டது.

சட்டென்று தலையை உலுக்கிக் கொண்டு நினைவில் இருந்து மீண்ட வித்யா தன் எதிரில் சந்தோஷத்தில் அகமும் முகமும் மலர நின்று கொண்டு இருக்கும் தன் அண்ணனைப் பார்த்தான்.

எல்லாம் நல்லபடியாக முடிந்துவிடும் என்ற நம்பிக்கையுடன் நின்றிருந்த மன்னியின் முகமும் கல்யாணப் பெண்களுக்கே உரிய வெட்கமும் மகிழ்ச்சியுமாக நிற்கும் இந்துவின் முகமும் வித்யாவின் பார்வையில் பட்டன.



வித்யா ஒரு முடிவுக்கு வந்து விட்டாள்.

அவள் தனக்குத் தெரிந்தவைகளையும், பார்த்தவைகளையும், அந்த மாப்பிள்ளைப் பையனுக்கும் ராதைக்கும் உள்ள காதலையும் —எல்லாவற்றையுமே விவரமாகச் சொல்லி நிறுத்தியபோது—

கல்யாணி, ராகவன், இந்து — மூவரின் முகமுமே வெளிறிப் போயிருந்தது.

இந்து அழவே துவங்கி விட்டாள்.

வித்யாவுக்கு அவளைப் பார்க்கவே பரிதாபமாக இருந்தது. ஆறுதலாக அவள் தோள்களில் தட்டிக் கொடுத்து அவளைத் தன்னோடு அணைத்துக் கொண்டாள்.

"நான் வரட்டுமா அண்ணா! நான் இங்கே இவ்வளவு நாட்களுக்குப் பிறகு வந்து, உங்களுக்குச் சந்தோஷத்தைக் கொடுக்க முடியவில்லையே என்று வருத்தமாக இருக்கிறது. நம்ப இந்துவுக்கு இதைவிட நல்ல இடத்துச் சம்பந்தம் வரும் அண்ணா... வரட்டுமா?"

வித்யா கிளம்பி விட்டாள்.

ராகவனும் கல்யாணியும் ஒரு வார்த்தை கூடப் பேசாமலே இருந்தது வித்யாவுக்கு மிகவும் வருத்தமாக இருந்தது.

"என் மீது கோபமா அண்ணா?" என்றாள்.

"சேச்சே... அதெல்லாம் ஒன்றுமில்லையம்மா. நீ சொன்னதையெல்லாம் கேட்கக் கேட்க மனசு என்னவோ போல ஆயிடுத்து. நீ சொன்ன மாதிரி இது இப்பவே தெரிஞ்சதும் நல்லதுதான். இதையெல்லாம் ஒண்ணும் மனசிலே வெச்சுக்காதே. அடிக்கடி வந்து போய்க் கொண்டு இரு. இந்துவுக்கு வேறொரு நல்ல இடம் இருந்தாலும் பார்த்துச் சொல்லு....!"

தன் ஏமாற்றங்களை மறைத்துக் கொண்டு ராகவன் பேசினார். அவர் பேச்சை ஆமோதிக்கிறாற்போல கல்யாணியும் இந்துவும் தலையை அசைத்தார்கள்.

வித்யாவுக்குத் தன் மனத்தில் இருந்த பெரிய பாரம் ஒன்று இறங்கிவிட்டதைப் போலிருந்தது.

அவள் வீட்டுக்குத் திரும்பி வெகுநேரம் வரையிலும் கூட இதே நினைவுகள் அவள் மனத்தில் வலம் வந்து கொண்டிருந்தன.

கர்நாடகா மாநிலத்திலுள்ள காட்டு இலாகா யானைகள் ஒரு நாளைக்கு நான்கு மணி நேரமே வேலை செய்கின்றன. ஒரு வருடத்தில் மூன்று மாத காலத்திற்கு அவைகளுக்கு ஓய்வு அளிக்க சட்டத்தில் உத்திரவாதம் அளிக்கப் பட்டுள்ளது.

தகவல்: சக்தி மதுனான்



இந்துவின் திருமணம் தடைப்பட்டு விட்டதே என்ற வருத்தத்தை விட ராதையைப் போன்ற ஒரு நல்ல பெண்ணின் காதல் இது போன்ற ஓர் ஏமாற்றுப் பேர்வழியிடம் சிக்கிக் கொண்டதே என்ற வருத்தம்தான் அவளுக்கு நிறைய இருந்தது.

அவளும் காதல் தோல்வியை அனுபவித்தவள்தான்.

ஆனால் அந்தக் காதலும் மிக மிக மென்மையானது. கிண்ணத்தில் இருக்கும் எண்ணெய் கண்ணுக்குத் தெரியாமல் திரிவழியே போய்ச் சுடராக மாறுகிற மாதிரி மிக மிக மென்மையான காதல் அது!

அதைப் போலவே அந்தத் தோல்வியும் இரண்டாம் பேருக்குத் தெரியாமல் ரகசியமாகவே முடிந்து விட்டது.

இரண்டாம் பேருக்குக்கூடத் தெரியாமல் தனக்குள்ளாகவே வெகு நாட்கள் அழுது கொண்டிருந்தாள் வித்யா.

காதல்தான் இப்படி ஆயிற்று என்பது இல்லை.

அவள் மண வாழ்க்கையும் கூட ஒரு மின்னல் கீற்றுப் போலக் கண்ணைப் பறிக்கிற வெளிச்சத்துடன் ஆரம்பித்து அதே வேகத்திலேயே மறைந்தும் போயிற்று!

இறுதியாக நின்றது எல்லாம்—

நாலு வருஷத்துக்கும் குறைவான தாம்பத்தியமும் இரண்டு குழந்தைகளுக்குத் தாய் என்கிற பட்டமும்தான்!

இன்றைக்கு அவள் பிரபலமான அந்தக் கம்பெனியின் "எக்ஸிக்யூட்டிவ்" — காரும் பங்களாவுமான செல்வச் செழிப்பான வாழ்க்கை. குழந்தைகள் இருவரும் நன்றாகப் படித்தார்கள்.

இழந்துபோன வாழ்க்கையின் பல சந்தோஷங்களை இதுபோன்ற விஷயங்களில்தான் ஈடு செய்து கொண்டு சமாதானப்பட முடிந்தது. எவ்வளவோ விஷயங்களை அவள் மறந்து விட்டாள்.

ஆனால்—

அன்றைக்குத் தனக்கு ஏற்பட்ட காதல் தோல்வியின் வலியும் வேதனையும் மட்டும் அவளுக்கு மிக நன்றாகவே நினைவு இருந்தது.

தனக்கு ஏற்பட்ட இந்த நிலைமை வேறு எந்தப் பெண்ணுக்கும் ஏற்படக் கூடாது என்பதில் மட்டும் அவள் மிகவும் தீவிரமாக இருந்தாள்.

மறுநாள் அவள் கம்பெனிக்குப் போனதும் முதல் வேலையாக ராதைக்குப் போன் செய்து அவளைத் தன் அறைக்கு வரச் சொன்னாள்.

அறைக்குள் நுழைந்ததும் ராதையிடம் எப்படி விஷயத்தைச் சொல்வது என்று அவளுக்கு மிகவும் தயக்கமாக இருந்தது.

கொஞ்ச நேரம் வேறு விஷயங்களைப் பேசிக் கொண்டிருந்துவிட்டு நிதானமாக விஷயத்தைச் சொன்னாள்.

அவள் பேசப் பேச ராதையின் முகம் சிவந்துபோய்க் குப்பென்று வியர்வை வழிந்தது.

வித்யா எல்லாவற்றையும் சொல்லிமுடித்து விட்டுச் சற்றுநேரம் மௌனமாக இருந்தாள்

ஹரியானா மாநில முதலமைச்சர் பஜன்லால், ஒரு ஆண்டு பெட்ரோலுக்குச் செலவழித்த பணம் ரூ 1,96,236. இதே முதல்வர், ஒரு ஆண்டில் டெலிபோன் கட்டணமாகச் செலுத்திய தொகை ரூ 66,950 ஆதாரம்: இந்தியன் எக்ஸ்பிரஸ்

தகவல்: வெள்ளகால் இரா. கந்தையா



---

ராதை மௌனமாகத் தலை குனிந்து அமர்ந்து கொண்டிருந்தாள். அவள் தலை நிமிர்ந்தபோது அவள் கண்களில் இரண்டு துளி கண்ணீர் முத்துக்கள் கோத்துக் கொண்டு நின்றிருந்தன!

சேச்சே...அசடு.... இதுக்கெல்லாம்போய் அழலாமா? தைரியமாக இரு. நாங்களெல்லாம் எதற்கு இருக்கிறோம்? உன் வீட்டில் பெரியவர்கள் யாரையாவது என்னை வந்து பார்க்கச் சொல். அவனுக்கும் உனக்கும் கல்யாணம் நடக்க என்னால் முடிந்ததை எல்லாம் செய்கிறேன்'' என்றாள் வித்யா.

ராதை ஒரு பதிலும் சொல்லாமல் மௌனமாகவே உட்கார்ந்திருந்தாள். ஹால் கடிகாரத்தின் பெண்டுலத்தையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தது அவள் பார்வை. அவள் கொஞ்ச நேரம் யோசிக்கட்டும் என்று நினைத்து வித்யாவும் எழுந்து ஜன்னலருகே நின்று கொண்டாள். சற்றுநேரம் சென்று ராதை பேசினாள்:

''நான் நன்றாக யோசித்துப் பார்த்து விட்டேன் மேடம். இனிமேல் அவரை நம்பி என்னை அவரிடம் ஒப்படைப்பதில் எந்த அர்த்தமும் இல்லை என்று தோன்றுகிறது. நீங்கள் சொன்னதைக் கேட்டதும் முதலில் எனக்கு அதிர்ச்சியாகவும், ஆச்சரியமாகவும் இருந்தது. ஆனால் நான் உங்களை நம்புகிறேன். மேடம். எப்போது அவர் என்னை விட்டு விட்டு வேறொரு பெண்ணைப் பெண் பார்க்க வந்தாரோ அப்போதே என் காதல் இறந்து போய்விட்டதாகத் தோன்றுகிறது! இனிமேல் உங்களைப் போன்றவர்கள் முயற்சி செய்து நாங்கள் இருவரும் இணைந்தாலும் அங்கே இந்தக் காதலின் மென்மை கொஞ்சமும் இருக்காது. இந்தப் பிரிவுக்குக் காரணம் வெறும் மன வேற்றுமையாக இருந்தால் சரி செய்து கொள்ளலாம். இது மன வேறுபாடு அல்ல – பண வேறுபாடு மேடம்! – எங்களால் அவ்வளவு தூரம் செய்ய முடியாது என்று அவருக்கு நன்றாகவே தெரியும். அதனால்தான் இப்படி ஒரு முடிவுக்கு வந்திருக்க வேண்டும். 'எனிவே' உங்கள் அன்புக்குநான்நன்றியுள்ளவள்-தாங்க்யூமேடம்.''

அவள் எழுந்து விட்டாள்.

வித்யா அவளை ஊன்றிப் பார்த்தாள்.

காதல் தோல்வியின் வலி கொஞ்சமேனும் அவள் முகத்தில் தெரிகிறதா என்று தேடினாள்.

ராதை கொஞ்சம் கொஞ்சமாக அவளுடைய இயல்பான நிலைமைக்கு மாறிக் கொண்டு இருப்பதும் அவளுக்குப் புரிந்தது.

அன்றைக்குத் தனக்கு ஏற்பட்ட காதல் தோல்வியும் அதனால் நாள் கணக்கில் ரகசியமாக அழுததும், தன் கல்யாணத்துக்குப் பிறகும் வெகு நாட்கள் வரை அதை நினைந்து வருந்தியதும் நினைவுக்கு வந்தது!

'காதல் தோல்வி-இத்தனை சுலபமானதா?' என்கிற மாதிரி அவள் ராதையை மீண்டும் ஒரு முறை பார்த்தாள்.

''இந்தப் பெண்ணால், இதை, எப்படி, இவ்வளவு சுலபமாக எடுத்துக் கொள்ள முடிகிறது?என்றுதானே நினைக்கிறீர்கள் மேடம்!''

''எஸ்!''

''காதல் புனிதமானது. மென்மையானது. தெய்வீகமானது – இன்னும் என்னவெல்லாம் வேண்டுமோ அவ்வளவும் சொல்லிக்கொள்ளலாம்! காதல் தோல்வியும்வலிமையானது, வேதனை அளிப்பது – இன்னும் எவ்வளவு வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளலாம். ஆனால்– ஒரு ஏமாற்றுப் பேர்வழியை நம்பி வாழ்க்கையையே நாசமாக்கிக் கொள்வதை விட காதல் தோல்வியைத் தாங்கிக் கொள்வது சுலபம் என்று நான் நினைக்கிறேன் மேடம்!

''பரஸ்பரம் நம்பிக்கைகளை இழந்துவிட்டுப் போலியாக வாழ்வதை விட – அவநம்பிக்கை தோன்றிய கணத்திலேயே பிரிந்துவிடுவது மிகவும் நல்லது என்று நான் நினைக்கிறேன் மேடம். இதை நான் ஒரு பெரிய வீழ்ச்சியாகவோ, வேதனையாகவோ நினைக்கவில்லை. காரணம், என் காதலை விட என் நம்பிக்கைகள் எனக்குப் பெரியவை! முக்கியமானவை. அவசியமானவையும் கூட! இவற்றை எல்லாம் விட்டு விட்டு அப்படி ஒரு வாழ்க்கை அமைவதை விட என் காதல் தோற்றுப் போயிற்று என்று ஒப்புக்கொள்வதும், ஏற்றுக் கொள்வதும் எனக்கு மிகவும் சுலபம். நான் வருகிறேன் மேடம்!''

ராதை கிளம்பி விட்டாள்.

வித்யா சற்று நேரம் விக்கித்துப் போய் உட்கார்ந்து கொண்டிருந்தாள்.

தகர்க்க முடியாத மன உறுதியுடன் ராதை பேசிவிட்டுப் போனவை யெல்லாம் அவள் மனத்தில் திரும்பத் திரும்ப ஒலித்தன.

அவள் மன உறுதியையும், நம்பிக்கைகளையும் தன் மனத்துக்குள் பாராட்டியபடி ஜன்னலுக்கு வெளியே பார்த்தாள்.

ராதை போய்க் கொண்டிருந்தாள்.

கூடவே அவள் நிழலும் ஊர்ந்து சென்றது.

'முகங்கள் பழையதானாலும் இந்த நிழல்கள் புதியவை!' – என்று வித்யா தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

பெரியம்மா சுமதியைத் தவிர யாருக்கும் மாதங்கியைச் சட்டென்று பிடித்து விடும். வீட்டு மனிதர்களுடன் நட்புக் கொண்டு கபடமற்று உறவாடும் ஒரு சுபாவம் அவளுக்கு இயற்கையாகவே அமைந்து விட்டிருந்தது. வந்த சில நாட்களிலேயே நர்மதாவுக்கு அவளை மிகவும் பிடித்து விட்டது.

அல்சூர் சாலையில் சண்பக மரங்கள் சூழ்ந்த தோட்டத்துக்குள்ளே அடங்கியிருந்த சின்னஞ் சிறு வீட்டில் அவள் இரண்டு வேலை ஆட்களுடன் தனியே வசித்துக் கொண்டிருந்தாள். உயரமும் பருமனுமான தோற்றம். சிவந்த மேனி. அறுபது வயதை எட்டிவிட்டது தெரியாத மிடுக்கு நடை. அதட்டலான பேச்சு. நரை தெரியாத கருப்புப் பூச்சில் கழுத்து வரை வெட்டி விடப்பட்டிருக்கும் அடர்ந்த முடி. கை விரல்களில் நகப் பூச்சு. உதட்டில் அழுத்தமான சாயம். முகத்தில் மிதமான பவுடர் பூச்சு. தோற்றத்திலும் பேசும் தோரணையிலும் மாமியார் கஸ்தூரிக்கு முற்றிலும் மாறுபட்டவள். ஆனால் நெருங்கிப் பழகிய போது கஸ்தூரியிடம் காணப்பட்ட அதே அன்பும் — பண்பும் — பாசமும் தெரிந்தன. அதனால்தான் தோற்றத்திலே முற்றிலும் மாறுபட்ட இருவர் — மனத்தால் ஒன்றுபட்டிருப்பதால் நெருங்கிய தோழிகளாக இருக்கின்றனர் போலும். மாதங்கி தனக்குள்ளே நர்மதாவைப் பற்றிக் கணிப்பு செய்து கொண்டாள்.

தன் பாதுகாப்பில் வந்து மாதங்கி தங்கத் தொடங்கிய சில நாட்களுக்குப் பின்னர் ஒரு நாள் காலை அவள் அந்தப் பெண்ணைத் தன் காரில் கூட அழைத்துச் சென்றாள். கங்கா காவேரி இன்ஸ்டிடியூட் என்னும் வேலை வாய்ப்புப் பயிற்சி தரும் ஸ்தாபனத்தில் அவளை ஒரு மாணவியாகச் சேர்த்து விட்டாள். அந்த ஸ்தாபனத்தின் மூலம் பயிற்சி பெற்றவர்களுக்குத் தனியார் நிறுவனங்களில் சட்டென்று வேலை கிடைத்து விடும் என்றதொரு பெருமை அதற்கிருந்தது. அங்கே இடம் கிடைப்பதே சிரமமான காரியம். ஆனாலும் நர்மதா தனது செல்வாக்கைத் தெரிந்தவர்கள் மூலம் உபயோகித்து மாதங்கிக்கு அதில் இடம் பிடித்துக் கொடுத்து விட்டிருந்தாள். செகரடேரியல் கோர்ஸ் எனும் பகுதியில் மாதங்கி சேர்ந்து பயிலத் தொடங்கி விட்டிருந்தாள்.

நர்மதா மிகவும் வெளிப்படையாகப் பேசுகிறவள். முதல் நாள் கங்கா காவேரி இன்ஸ்டிடியூட்டுக்கு மாதங்கி கிளம்பியதும் தானே அழைத்துச் செல்ல முன்வந்தாள். காரில் முன் ஆசனத்தில் தன் அருகே உட்கார வைத்துக்கொண்டு தோட்டத்திலிருந்தபடியே தான் சொல்ல விரும்பியதைப் படபடவென்று பேசத்தொடங்கினாள்.

''மாதங்கி, முதலில் நீ ஒண்ணு தெரிஞ்சுக்கணும். நான் உன்னை எவ்விதமான கட்டுப்பாடுகளுக்கும் உட்படுத்த மாட்டேன். நீ சுதந்திரமாக எங்கே வேணுமானாலும் போகலாம். வரலாம். யாருடனும் பழகலாம். பேசலாம். உனக்குப் பூரண உரிமை உண்டு. ஆனால் நான் சொல்லப் போறதைக் கொஞ்சம் கவனிச்சு வச்சுக்கோ. இந்த ஊர்க்காரங்க உங்க ஊர்க்காரங்களை விடக் கொஞ்சம் முற்போக்கானவங்க — பத்தாம் பசலித்தனத்தை இந்த வட்டாரத்தில் நீ அதிகம் பார்க்க மாட்டே. ஆண்களும் பெண்களும் சேர்ந்து படிக்கிற இடம் நீ சேர்ந்திருக்கும் அந்த ஸ்தாபனம். உள்ளத்து உணர்வுகளைப் பூட்டி வைக்காமல் சகஜமாக சரளமாக எல்லாரும் எல்லோரிடமும் பேசுவாங்க — பழகுவாங்க. நீயும் அப்படிப் பழகத் தெரிஞ்சுக்கணும். தொட்டாச் சுருங்கி போலப் பயந்தவளாட்டம் நடந்துக்கக் கூடாது. வெளி உலகில் பலபேரோடு பழகச் சந்தர்ப்பம் இருந்தும் தனது வரம்புக்குள்ளே தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு பழகத் தெரிஞ்சுக்கிற போதுதான் ஒரு பெண்ணை உண்மையான ஒழுக்கம் உடையவள்னு சொல்ல முடியும். சந்தர்ப்பமும் சூழ்நிலையும் இல்லாததால் ஒழுக்கமாக ஒரு பெண் இருப்பது உசத்தியல்ல.



# கழுத்தில் விழுந்த ●●●

அப்புறம் இன்னொரு முக்கிய விஷயம். நீ நாளடைவில் கன்னடம் படிக்க, எழுத, பேசக் கத்துக்கணும். நான் தமிழ் நாட்டிலே வாழ்ந்த காலத்தில் உன் மாமியாரை விட தமிழ் அதிகமாகவே படிக்க — பேசக் கத்துக் கொண்டிருந்தேன். அந்தந்த ஊர்க்காரங்க மொழியிலே பேசத் தெரியும்போதுதான் நமக்கும் மற்றவங்களுக்கும் இடையே நேச பாவம் நெருக்கமடைகிறது. புரிஞ்சுதா?''

நர்மதா ஒரே மூச்சாகப் பேசிவிட்டு உரத்த குரலில் சிரித்தாள்.

நர்மதாவின் ஆலோசனைப்படியே மாதங்கி மற்ற மாணவ மாணவிகளுடன் நட்புரிமை பாராட்டிப் பழகத் தெரிந்து கொண்டாள். வீட்டு வேலைகளை மட்டுமே கவனித்துக் கொண்டு பெரியம்மாவுக்கு ஓர் எடுபிடி ஆளாகப் பணிபுரிந்து கொண்டிருந்த நிலையிலிருந்து பழையபடி மாணவியாகி, கவலையற்றுச் சுதந்திரமாக வாழ நேர்ந்த அந்தப் புதிய அனுபவத்தை அவள் மிகவும் ரசித்தாள்.

## 16

மிக விரைவில் பெங்களூரில் அவர்கள் வசித்த பகுதியிலிருந்த பல தெருக்களை அவள் தெரிந்து கொண்டு விட்டிருந்தாள். நர்மதா வீட்டிலிருந்து பயிற்சி ஸ்தாபனத்துக்கு விரைவாகச் செல்ல எந்தத் தெருவுக்குள் நுழைந்தால் சீக்கிரம் போக முடியும் என்றெல்லாம் தெரிந்து வைத்துக் கொண்டு விட்டாள்.



கோடை வெய்யிலே தெரியாது குளுமையாக வீசிய காற்றில் சாலை ஓரத்தில் வண்ண வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கும் மரங்கள் அணி செய்யும் அழகைக் கண்டு களித்தபடி மெல்ல நடந்து போய்விடுவது அவளுக்கு மிகவும் சுவையானதொரு அனுபவமாக இருந்தது.

கல்வி நிறுவனத்தில் விரைவில் அவளுக்குப் பல தோழிகள் சேர்ந்து விட்டனர். சில மாணவர்களிடம் கூட அவள் நெருங்கி சகஜமாகப் பேசத் தெரிந்து கொண்டு விட்டிருந்தாள். நத்தையைப் போல உள்ளே இழுத்து நாணிக் கோணிக் கொள்ளாது நிமிர்ந்த முகத்துடன் கல்வி சம்பந்தப்பட்ட விஷயங்களை அவர்களுடன் சரிக்குச் சரியாக விவாதித்துப் பேசும் ஆற்றலை வளர்த்துக் கொண்டு விட்டாள்.

நெருங்கிப் பழகின மாணவிகளில் ஒருத்தி ஒரு நாள் அவளிடம் அந்தக் கேள்வியைக் கேட்டுவிட்டாள்.

''உன் பெயருக்கு முன் ஸ்ரீமதின்னு இருக்கிறதைக் கவனிச்சேன். பிறகு கழுத்தைப் பார்த்தேன். தாலிச் சரடு தெரிந்தது. உன் கணவனை விட்டு இங்கே ஏன் படிக்க வந்தே? உங்க சென்னையிலும் இது மாதிரி பல கல்வி நிறுவனங்கள் செயல்படுவதாகக் கேள்வி...''

ஓங்கித் தலையில் யாரோ குட்டிவிட்டதைப் போன்ற வேதனை, மாதங்கிக்கு. நெருங்கிப் பழகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்றுதான் நர்மதா உபதேசித்திருந்தாள். எல்லாரிடமும் அவள் வாழ்க்கையின் விவகாரத்தை அப்பட்டமாக அவிழ்த்து விட வேண்டும் என்று சொல்லவில்லையே?

''இந்த நிறுவனத்தில் படிக்கணும்னு என் மாமியார் உத்தரவு.''

''உன் கணவனைப் பிரிஞ்சு இருக்கியே மனத்துக்குக் கஷ்டமாக இல்லையா?''

நெஞ்சை அடைத்த வேதனையை விழுங்கிக் கொண்டாள் மாதங்கி.

''அவர் வெளி நாடு போயிருக்கிறார். அதை மறக்கத்தான் இந்த ஏற்பாடு.'' சட்டென்று அந்தத் தோழியின் அருகிலிருந்து அப்பால் நழுவினாள்.

ஹர்ஷனின் நினைவு மனத்திலே தோன்ற இடமின்றி வேலை பயிலும் முயற்சியில் நாட்கள் வேகமாகத்தான் நகர்ந்து கொண்டிருந்தன. காலை எட்டு மணியிலிருந்து பன்னிரண்டு மணி வரைதான் அவளது பயிற்சி. பற்பல எண்ணி மீதிப் பொழுதை அவள் மனக் குழப்பத்திலே கழிக்க நர்மதா அனுமதிப்பதில்லை.

காலை வேளையில் தன்னுடன் அமர்ந்து காப்பி டிபன் சாப்பிட்டுவிட்டுத்தான் அவள் கங்கா காவேரிக்குப் புறப்பட வேண்டும் என்று நிர்ப்பந்தித்தாள். பகல் அவள் வீடு திரும்பும்வரை அவளுக்காகக் கூடச் சாப்பிடக் காத்திருந்தாள். பகல் உணவுக்குப் பின்னர் தன்னுடன் அவளை இந்திரா நகரில் தான்

## ● மாலை ● ● ● லக்ஷ்மி




✖ ரேவதிசிவராமன், தூத்துக்குடி 5

கே: ஸ்ரீராமர் பட்டாபிஷேக படத்தை வீட்டில் மாட்டுவது இடையூறு அளிக்கும் என சிலர் கூறுகின்றனரே? மாட்டலாமா, கூடாதா?

ப: வாரியார் சுவாமிகளிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டிய கேள்வி. உங்கள் சார்பாக நான் கேட்டேன். "ஸ்ரீராமர் பட்டாபிஷேகப் படம்வீட்டில் இருப்பது பரம மங்களம். ஒரு தீங்கும் வராது" என்று தெரிவித்தார்.

✖ எஸ். ஏ. விஸ்வநாதன், தாம்பரம்

கே. பால்கிவாலாவின் பேச்சைப்பற்றி உங்களுடைய கருத்தென்ன?

ப: பால்கிவாலா கோர்ட்டில் பேசுவதற்கு மணிக்கு நூறாயிரமோ பத்தாயிரமோ வாங்குகிறார் என்று சேதி. பொதுக் கூட்டங்களில் அவர் இலவசமாகத் தான் உரை நிகழ்த்துவார். ஆனால் அந்தச் சுவையான பேச்சுக்குப் பத்தாயிரம் கூடக் கொடுக்கலாம் என்று தோன்றும்!

✖ இரா. பார்த்திபன், வயலூர் 2

கே: வயலூர் என்றதும் உங்கள் நினைவுக்கு வருவது எது?

ப: எம். என். நம்பியார்! எப்படி என்று கேட்கிறீர்களா? வயலூர் என்றதும் பார்த்திபன் பெயரும், அதிலிருந்து பார்த்திபன் கனவு — அமரர் கல்கி — குதிரை மேல் சவாரி செய்யும் அவதாரம் — குதிரை—கிண்டிப் பந்தயம் — சூதாட்டம் — சகுனி — வில்லன் — எம். என். நம்பியார் இப்படிச் சங்கிலியாகப் பல விஷயங்கள் நினைவுக்கு வந்து நம்பியாரில் நிற்கிறது!

✖ சந்திரபோஸ், துறையூர்

கே: பாரதிராஜா உங்களைக் கதாநாயகனாக நடிக்க புக் செய்ய வந்தபோது மறுத்து விட்டீராமே, ஏன்?

ப: ரேட்!




# கடுகு பதில்கள்!

வைத்து நடத்திக் கொண்டிருந்த 'நர்மதா பொட்டீக்' என்னும் பெண்கள் ரெடிமேட் ஆடைக் கடைக்கு உதவி செய்யக் கூடவே அழைத்துச் செல்வது வழக்கம். சனி, ஞாயிறுகளில் கார் ஓட்டும் பள்ளியிலே கார் ஓட்டக் கற்றுக் கொள்ளும் பயிற்சியில் ஈடுபடுத்தினாள். இரவு உணவுக்குப் பின் முன் அறையில் உட்கார்ந்து ஊர்க் கதைகளைப் பேசிப் பொழுதைக் கழித்து விட்டுத்தான் உறங்கப் போவது வழக்கம்.

நாள் முழுவதையும் வேகமாகப் புதிய அனுபவங்களிலே கழித்த போதிலும் இரவில் தனிமையில் அவளுக்குத் திடீரென்று புக்ககத்தின் நினைவு ஏற்படத்தான் செய்தது.

மாமியாரின் கருணையினால்தானே அவளுக்கு இப்படிப்பட்ட கல்வி அனுபவமும் சுதந்திரமான சுகமானதொரு வாழ்க்கையும் அமைந்திருக்கிறது கஸ்தூரியின் தாராள மனத்தை எண்ணி மனம் கசிந்தாள். ஹர்ஷனின் நினைவை என்ன முயன்றும் மனத்திலிருந்து ஒதுக்க முடியாது அவதிப்பட்டாள்.

பிறந்த நாள் அன்று கோவிலுக்குக் கூட வந்தபோது அன்பாகப் பேசத் தெரிந்த அவனுக்குத் திடீரென்று என்ன வந்துவிட்டது? அவளை அந்த வீட்டில் மறுபடியும் பார்க்க விரும்பாத அளவுக்குத் துவேஷம் வரக் காரணம்?...

புரியாத அந்தப் புதிர் முள்ளாக மனத்தை நெருட....அதன் வேதனையைத் தாளாது இரவின் தனிமையில் தன் அறையில் தலையணை மீது முகத்தைப் பதித்தவாறு ஓசைப்படாது கண்ணீரை உகுத்தாள்.

அடிக்கடி அவள் கஸ்தூரிக்குக் கடிதம் போட்டுக் கொண்டிருந்தாள். மாமியாரிடமிருந்து தவறாமல் பதில்கள் வந்துகொண்டிருந்தன. அவளது படிப்பைப் பற்றியும் உடம்பு சுகம் பற்றியும்தான் மாமியார் அக்கறையாக விசாரித்துக் கேட்டிருந்தாள். தப்பித் தவறிக்கூடத் தன் மகனைப் பற்றி ஒரு வரிகூட அவள் எழுதினதில்லை. கணவனைப் பற்றி அறிய ஆவல் இருந்தபோதிலும் கேட்டெழுத மாதங்கிக்குத் துணிவு இருக்கவில்லை.

இந்த நிலையில் ஆறு மாத காலம் ஓடிச் சென்றுவிட்டது.

மாதங்கி வேகமாக டைப் அடிக்கவும், தொலைபேசித் தொகுதிகளை இயக்கவும் தெரிந்து கொண்டு விட்டாள். அலுவலகத்தில் காரியதரிசியாகப் பணிபுரிய வேண்டிய தகுதிகளை வேகமாகப் பயின்று கொண்டு விட்டாள். நர்மதா அம்மாளைக் காரில் இங்குமங்கும் அழைத்துச் செல்லுமளவுக்குக் கார் ஓட்டும் திறமையும் பெற்றுவிட்டாள். இன்னும் இரண்டு மாத காலப் பயிற்சிக்குப் பின்னர் தேர்வு. அதில் வெற்றி பெற்றுவிட்ட பின்னர் அவள் என்ன செய்யப் போகிறாள்? உள்ளூற ஒரு கவலை அவளை மெல்ல அரிக்கத் தொடங்கியது.

அச்சமயம் ஒரு ஞாயிற்றுக் கிழமை சாப்பாட்டறையில் அவர்கள் இருவரும் காப்பி டிபன் சாப்பிட்டுக் கொண்டிருந்த சமயம் நர்மதா திடீரென்று ஆரம்பித்தாள்:

# வாரியாரிடம் கேட்க வேண்டிய கேள்வி!



⌘ மு. நடராஜ கரையாளர், செங்கோட்டை.
கே: இட ஒதுக்கீடு பிரச்னை எதில் போய் முடியும்?
ப: மேலும் பலவிதமான பிரச்னைகள் பெருகுவதற்கு இடமளிப்பதில்!

⌘ எஸ். முல்லை மணாளன், சென்னை 24
கே: நன்றி சொல்லும் பழக்கம் நல்லதா?
ப: நல்லதுதான். அதைவிட நல்லது, அப்படி இருப்பது.

⌘ டி. எஸ். ரெட்டி, வேலிடுபட்டி
கே: தோல்விக்கும் கடுகளிற்கும் உள்ள தூரம் எவ்வளவு?
ப: பல சமயம் அது என்னைத் தழுவியிருக்கிறது. சில சமயம் நான் நழுவிப் போயிருக்கிறேன். தோல்விகளைச் சந்திப்பதில் ஆபத்தில்லை. அதன் விளைவாகத் தோல்வி மனப்பான்மை ஏற்படாமல் இருந்தால் வெற்றி.

⌘ கா. மு. பாரூக், நங்கநல்லூர்
கே: வாழ்க்கையில் உயரவேண்டும் என்று நினைப்பவன் தான் உயர்ந்த பின் என்ன நினைப்பான்?
ப: மற்றவன் உயரக் கூடாது என்று (இது பெரும்பாலானவர்களின் நினைப்பு). தாங்கள் சந்தித்த தொல்லைகளையும் தடங்கல்களையும் எப்படிச் சமாளித்தோம் என்று சொல்ல மாட்டார்கள் பலர். அவனும் விழுந்து, எழுந்து வரட்டுமே என்றுதான் நினைப்பார்கள். அல்லது வரக் கூடாது என்று நினைப்பார்கள். உதாரணமாக ஒருவர் ரேஷன் கார்டை வேறு பகுதிக்கு மாற்ற வேண்டும் என்று வைத்துக் கொள்ளுங்கள். அதற்கு எந்த பாரத்தில் மனு செய்யவேண்டும், யார்யார்கையெழுத்தை எங்கு வாங்கி, எந்த ஆபீசில் எந்த மாடியில், எந்தக் கவுண்டரில் கொடுத்து எத்தனை நாள் கழித்து வாங்கிக்கொள்ள வேண்டும் என்பவைகளை ஏகப்பட்ட அலைச்சலுக்குப் பிறகு அவர் தெரிந்து கொள்கிறார். யாராவது ஒருத்தர், ''ஏன் ஸார், ரேஷன் கார்டை மாற்ற வேண்டும். என்ன 'ப்ரொஸீஜர்?' ''என்று கேட்டால்,'' ''ரேஷன் ஆபீசில் போய்க் கேட்டுப் பாருங்கள்'' என்றுதான் சொல்வார்!'

⌘ எம். விஜய சேகர், துபாய்
கே: உங்கள் புகைப்படத்தை ஏன் இந்தப் பகுதியில் போடுவதில்லை?
ப: இது 'அடல்ட்ஸ் ஒன்லி' பத்திரிகை அல்ல என்பதால், சிறுவர் சிறுமிகளும் படிக்கிறார்கள். அவர்கள் பயந்துவிடக்கூடாதே என்றுதான் போடவில்லை.

பரிசு பெறுவர்:
**ரேவதி சிவராமன்**
**ஜி. 27 ஸ்பிக் நகர், தூத்துக்குடி - 628005**

---

''உன்னை ஒன்று கேட்கப் போகிறேன். மனம் விட்டு உண்மையை நீ சொல்லணும்.''

கையில் பிடித்திருந்த காப்பிக் கோப்பையைத் திகைப்புடன் மேஜை மேல் வைத்துவிட்டு மாதங்கி குழப்பத்துடன் விழித்தாள்.

''நீ உன் வாழ்க்கையைப் பற்றி ஏதாவது ஒரு முடிவுக்கு வரணும் இல்லையா? சின்ன வயசுப் பெண். வெறும் பெயரளவில் நடந்த பொம்மைக் கல்யாணத்தை வெச்சுக்கிட்டு உன்னையே நீ பாழாக்கிக் கொள்ள முடியாதல்லவா...பத்தாம் பசலித்தனத்தை உதறி விட்டு இந்தக் காலத்துப் பெண்ணாக நீ நினைக்கவும் செயல்படவும் தெரிஞ்சுக்கணும்னு ஆரம்பத்திலேயே' சொல்லியிருக்கேன் இல்லையா?''

''என்ன சொல்றீங்க... ஒண்ணுமே புரியலையே...'' மாதங்கி மெல்லிய குரலில் வியப்புடன் கேட்டாள்.

''அந்தக் காலத்தில் நான் பார்த்த நாடகத்தின் ஒரு காட்சி ஞாபகத்துக்கு வரது. கழுத்தில் விழுந்த மாலையைக் கழற்ற முடியலையேன்னு கோவலன் கலங்கிக் கொண்டு பாடுவான். அதுபோல உன் கழுத்தில் விழுந்த மாலைக்குத் தனியானதொரு மகிமை ஏதாவது ஏற்பட்டு விட்டதா என்ன?... வற்புறுத்தலுக்கு இணங்கி உன் கழுத்தில் தாலியைக் கட்டிவிட்டுக் கோழை போல் ஒதுங்கிக் கொண்டு விட்ட ஹர்ஷனையே நீ நினைச்சுக் கொண்டு ஏன் கலங்கணும்?

''கழுத்தில் விழுந்த மாலையைக் கழற்றித் தூர வைக்க முடியும்னு நீ ஏன் நினைச்சு வாழ்க்கையை மாத்தி அமைச்சுக்கக் கூடாது?''

''அம்மா!..'' மாதங்கி வியப்பும் துயரமுமாக அவளை நிமிர்ந்து பார்த்தாள்.

''ஒரு வருஷ காலம் நீயும் ஹர்ஷனும் பிரிஞ்சு இருந்துட்டு இருவரும் மனம் ஒப்பினால் எவ்விதச் சிக்கலுமின்றி விவாகரத்து செய்து கொள்ள முடியும். உன் அழகுக்கும் உன் படிப்புக்கும் உன் குணத்துக்கும் வேறே நல்லவனாக ஒரு கணவன் கிடைப்பான். வற்புறுத்தலில் இணைந்த கல்யாணத்திலே ஆணுக்கும் சரி, பெண்ணுக்கும் சரி, நீடித்து அந்தத் துன்பத்தில் உழல வேண்டிய அவசியமில்லை. விடுதலை பெற்றுக் கொள்ள உரிமை இருக்கு....புரிஞ்சுதா?....''

விவாகரத்து பற்றி நர்மதா ஏன் இடையே பேசுகிறாள்? மாமியார் கஸ்தூரி எடுத்துவிட்டிருக்கும் முடிவா?

நேரிடையாகத் தான்கடிதத்தில் அவனுக்கு எழுத அஞ்சிக் கொண்டு தோழி மூலம் இப்படித் தெரிவிக்க விரும்புகிறாளா?...

தொண்டைக்குள் என்னவோ அடைத்த உணர்வில் கரை ஓரத்து இமைகளில் கனத்த நீரைச் சமாளித்துக் கொண்டாள் மாதங்கி.

''என் கணவர் விடுதலையை விரும்பினால் அவருக்கு ஒரு தொல்லையாக இருந்து அவரை இம்சிப்பதை நான் விரும்பவில்லை. அதில் அர்த்தமும் இல்லை. இதைப் பற்றி யோசித்து முடிவுக்கு வர எனக்கு அவகாசம் தேவை...'' மெல்லிய குரலில்.. கிணற்றுக்குள்ளிருந்து பேசுவது போல் மாதங்கி பதிலளித்தாள்.

(தொடரும்)

கற்பனை வில் இதோ.
பேனா அம்பு இதோ.
வில்லிலிருந்து அம்பு புறப்படுகிறது இதோ.
கால வானத்தில் பயணம்.
1981.....1986.....
அம்பு போய்க் கொண்டிருக்கிறது.
1991....1996....
அம்பு போய்க் கொண்டிருக்கிறது.
அம்பு அந்தக் காலண்டரில் பாய்கிறது. நிற்கிறது.
3–5–2,001.

அந்தக் கிராமத்தில் மரங்கள் மண்டையாட்டின. புற்கள் புன்சிரித்தன. புறாக்கள் படபடத்தன. சாலைகள் காலை நீட்டிப் படுத்திருந்தன. ஆகாயத்தில்.... அந்தரத்தில் அந்தப் பூச்சி வந்து கொண்டிருந்தது.

அருகில் தெரிய... அது பூச்சியல்ல. எந்திரம். பறக்கும் எந்திரம். சின்ன சைஸ் ராக்கெட். இரண்டு எட்டுக்கால் பூச்சிகள் தப்பு செய்து கொண்டிருப்பது போல் பதினாறு கால்கள் தெரிந்தன. உடலெங்கும் பளிரிடும் விஞ்ஞான வஸ்துக்கள்.

அது அறுந்துபோன பட்டம் போல் மெதுவாய் ஆடி, ஆடி, ஆவணி, ஆவணி, புரட்டாசி....ச்சை! ஒரு நல்ல நெல் வயலின் நடுவான நடுவில் உட்கார்ந்து கொண்டது.

ராக்கெட்டுக்கு உள்ளே...

''இந்த அற்புதமான நிமிடத்துக்காக நாம் எத்தனை பாடுபட்டோம்'' என்றான் மட்கர் சாபூரியல்.

மட்கர் என்பது பெயர்.

சாபூரி என்பது மொழி. (பேல்பூரியின் தம்பியல்ல.)

'என்றான் மட்கர்' என்றதும் மட்கருக்கு வயது முப்பதுக்குள் என்று நீங்களாக நினைத்துக்கொண்டது தப்பு. இந்தாருங்கள் அழிரப்பர். அழித்துவிடுங்கள்.

மட்கருக்கு வயது அதிகம். பதினேழு வயதில் 'தஸ்டில்' உபயோகிக்கும் பேத்தி இருக்கிறாள். (தஸ்டில் என்றால்... இங்கே 'கேர்-ஃப்ரீ' போல கிஜாட்டில் உபயோகத்திலிருக்கும் 'டவல்')

கிஜாட் என்றால்....?

நகரம்? – இல்லை.

நாடு? – இல்லை.

பின்? – உலகம். பூமியைப் போன்ற ஒரு உலகம்.

மேலே உளறுமுன் கொஞ்சம் விவரங்கள்.

யுனிவர்ஸில் ஆயிரக்கணக்கான மில்கி வேக்கள் இருப்பதாக நம்பப் படுகிறது. படுகிறதா. அந்த மில்கி வேக்களில் பலப்பல ஸோலார் சிஸ்டங்கள் இருக்கலாம் எனவும் நம்பப்படுகிறது. படுகிறதா. அந்த சிஸ்டங்களில் பூமியைப் போலவே மனித உயிர்களைக் கொண்ட பல உலகங்கள் இருக்கலாம் எனவும் நம்பப் படுகிறது.

இப்போது 'கிஜாட்'டை உங்களால் ஜீரணிக்க முடியும். மேற்கண்ட இஞ்சி மொரப்பாவை மறுபடி படித்தால் கொஞ்ச நஞ்ச சந்தேகங்களும் சடுதியில் அகலும்.

# இரண்டு கிஜாட்டர்கள்

19.4.81



மட்கரின் வயதில் தொடங்கினேம். மட்கருக்கு மண்டை முழுக்கமயிர். போன வாரம் தலையில் காணுமல் போன சின்ன பென்சில் இன்னமும் தேடப்பட்டுக் கொண்டிருக்கிறது. மூக்கின் மேலிருந்து கீழ் பட்டாணி சைஸில் குழந்தைகள் இருந்தால் சறுக்கலாம். பற்கள் பழுதடைந்திருந்தன. உடைந்துவிடும் ¦ஒரு பொருளில் உடைகள் செய்யப்பட்டிருந்தன. கோழி மூடும் கூடை போல, தலையை முழுவதுமாய் ஒரு கண்ணுடிக் கூடை மூடியிருந்தது.

மட்கருக்கு எதிரே ஒரு கட்கர். அவன் இந்தச் சிறு கதையில் மட்கர் பேசிய முதல் வசனத்துக்கு இத்தனே பாராக்கள் தள்ளி இப்போதுதான்...

''ஆமாம்'' என்றுன்.

''மூன்று வருடங்கள்! இந்த மனித கிரகத்தில் இறங்க நமக்கு மூன்று வருடங்கள் ஆகிவிட்டன. என்னுடைய மனைவி தன் தற்காலிகக் கணவனுடன் சேர்ந்து மூன்றரைக் குழந்தைகள் பெற்றிருப்பாள்!''

''மட்! மனைவி பற்றிப் பேச இதுவா நேரம்?''

''பின்னே? நமக்கு அடுத்த வேலை இந்த மனித கிரகத்தில் கால் வைப்பது. அது இப்போதல்ல. இன்னும் அறுபத்தி ஆறு நிமிடங்கள் கழித்து. நான் கொஞ்சம் தூங்கப் போகிறேன். நீ டெலிவிஷன் தொடர்பை நிறுத்திவிடு. மட்கர் தூங்கும்போது அசிங்கமாக இருப்பான். கிஜாட்டின் கோடி கோடி மக்கள் அதைக் காண வேண்டாம்.''

''மட்! நமக்கு அப்படி உத்தரவில்லை.''

''முட்டாளே! எச்சில் விழுங்கக் கூட உத்தரவை எதிர்பார்க்கிறுய். நாம் இப்போதைக்கு கிஜாட்டின் தலைவர்கள். சரித்திரம் படைக்க இருப்பவர்கள். அவர்கள் நமக்காகக் காத்திருக்கிறுர்கள்.''

கட்கர் கப்சிப்பினுன்.

சரியாக ஐம்பது நிமிடங்கள் உறங்கிவிட்டு எழுந்தான் மட்கர்.

''மட்! இறங்க ஆயத்தமாவோமா?''

''ஏன் மட், இந்தக் கிரகத்தின் மனிதர்களுடன் எப்படிப் பேசுவாய்? மொழி இடிக்குமே?''



''கட்கர் நீ எனக்கு உதவியாளனுய் இருக்க லாயக்கு இல்லை. நாம் இந்தக் கிரகத்துக்கு வருவதற்கு முன்னுல் ஆராய்ச்சி ராக்கெட்டுகள் இரண்டு அனுப்பி யிருக்கிறேம். அவை மோப்பம் பிடித்துக் காற்றில் கலந்

திருந்த ஒலி அலை வரிசைகளை அப்படியே பதிவு செய்து கொண்டு வந்தன. நமது கிஜாட்டில் கிந்தியா என்னும் நாட்டில் கிமிழ்நாடு என்னும் மாநிலத்தில் பேசப்படும் கிமிழ் மொழி இங்கேயும் பேசப்படுகிறது என்பதை நமது கம்ப்யூட்டர்கள் கண்டு பிடித்தன. விளைவாக நான் கிமிழ் நாட்டுக்கு அனுப்பப்பட்டு ஆறு மாதம் கிமிழ் மொழி கற்று வந்தேன். எனவே....''

''கிமிழ் மொழி பேசும் ஒருவனை நாம் சந்தித்தாக வேண்டும்.''

''ஆமாம்'' என்றான் மட்கர்.

''மட்கர்! கட்கர்! நீங்கள் கிரகத்தில் இறங்கலாம்'' என்று கிஜாட்டின் கண்ட்ரோல் முனையிலிருந்து உத்தரவு வர...

ராக்கெட்டின் கதவைத்திறந்தான் மட்கர்.

''மட்! உன் வாழ்வின் மறக்க முடியாத முக்கிய சம்பவம் இதோ உனக்கு முன்னால் ஒரு அடி தூரத்தில் இருக்கிறது. இன்னொரு மனிதர் வாழும் கிரகத்தில் கால் வைத்த முதல் கிஜாட்டன் என்கிற பெயர் உனக்கு. சில வருடங்கள் கழித்துப் பள்ளிக் குழந்தைகள் உன்பெயரைமனப்பாடம் செய்வர்.''

மட்கருக்குச் சிலிர்த்தது.

அடுத்து கட்கர் இறங்கினான். காற்று. ஓடி வந்து அணைத்தது. சூரியன் கன்னினான்.

சரியாகஒரு மணிநேரத்துக்கு முன்னால்..

நேபாள எல்லையில் இருக்கும் நமது இந்தியாவின் ரேடார் நிலையத்தில்... திரையில் கண்களைப் புதைத்து வைத்திருந்த ஆபீஸர் திடுக்கிட்டான்.

வலது மூலையில் அந்தப் புள்ளி தோன்றி வேகமாக, அதி அதி வேகமாக நகர... இதென்ன அனுமதி பெறாத வகையில் ஆகாய டிராஃபிக். கண்ட்ரோல் டவரின் மூலம் ''யார்? யார் இந்த விமானத்தில் உத்தரவு இல்லாமல் இந்த லைனில் குறுக்கிடுவது? மட விமானியே! உன்னை முதலில் அறிமுகப் படுத்து'' என்று ஆங்கிலத்தில் அலறினான்.

''காப்டன், அது விமானம் அல்ல. சிறிய பூச்சி ராக்கெட்போலத்தெரிகிறது. தொடர்பு கொண்டோம். பதில் இல்லை. அதில் மனிதர்கள் இருப்பதாகத் தெரியவில்லை. தானாக இயங்கிப் பறக்கிறது என்று நம்புகிறோம். தென்னிந்தியாவை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது'' என்று சர்வே விமானத்திலிருந்து பதில் வர...

ஆஃபீஸர் உடனே செயல்பட்டார்.

ஏர் டிஃபென்ஸ் கமாண்டருக்குச் செய்தி அனுப்பினார். மற்ற ரேடார் நிலையங்களுக்கு உயர் அதிகாரிகளுக்கு மடமடவென்று செய்தியை அறிவித்தார்.

சென்னை மீனம்பாக்கம் கண்டு பிடித்தது—அந்தப் பூச்சி ராக்கெட் சென்னைக்கு மிக அருகில் இறங்கிக் கொண்டிருப்பதை.

இரண்டு வேன்களில் என்ஜினீயர்கள், ஸ்பேஸ் ரீசர்ச் விஞ்ஞானிகள் புறப்பட்டார்கள்.

மண் சாலையில் மட்கர் நடக்க, நடக்க..' மனிதர்களின் நடமாட்டத்தைக் கண்டான். மகிழ்ந்தான்.

—தூரத்தில் வயல்களில் வேலை செய்து கொண்டிருந்தவர்கள் ஒவ்வொருவராக அந்தப் பூச்சி ராக்கெட்டை அடைந்து அதிசயமாகப் பார்க்கத் தொடங்கினார்கள்.

மாடுகளை ஓட்டி வந்தஒருவனை நிறுத்தினான் மட்கர். கிமிழில் ஒரு மரியாதைச் சொல் கற்றுத் தந்தார்களே, என்ன அது? ம்...ஆ... அது... ''வணக்கம்'' என்றான்.

விவசாயி விழித்தான். ஹிஹிஎன்றான்.

''உங்களுக்குக் கிமிழ் மொழி தெரியுமா?''

''தெரியாதுங்களே....''

''அட! இப்போது நீ சொன்ன பதில் கிமிழ் மொழிதான்.''

விவசாயி சிரித்தான். ''தமிழுங்க.''

''கட்கர், நம் உலகத்தின் கிமிழ் மொழிக்கு இங்கே 'தமிழுங்க' மொழி என்று பெயர் போலும். என் பெயர் மட்கர்'' என்று கையை நீட்டினான்.

''இருக்கட்டுங்க'' என்று நெளிந்தான்.

''நாங்கள் கிஜாட்டிலிருந்து வருகிறோம்.''

''பட்டணத்திலேர்ந்தாங்க?''

இந்த வார்த்தை மட்கருக்குப் புரியவில்லை. சும்மா தலையசைத்தான்.

''உங்கள் உலகத்துக்குப் பெயர் என்ன?''

''புரியலீங்க. நேராப் பண்ணையார் வீட்டு வாசல்ல ஒரு படிச்ச—தம்பி இருக்கும். அந்த கேளுங்க. வெவரமா சொல்லும்..''

அப்போது ஒரு பஸ் வந்து புகை பரப்பி நிற்க....போர்டில் 'சென்னை' என்று படித்து, ''வா, வா அதில் ஏறிச் செல்லலாம். சென்னை என்பது நகரமாக இருக்கும். இது கிராமம். நாம் சென்னையிலே விசாரித்து அரசாங்கத் தலைவரைச் சந்திக்க வேண்டும்'' என்றான் மட்கர்.

இருவரும் ஓடிச் சென்று ஏறிக் கொள்ள பஸ் சென்றது.

இரண்டு வேன்களும் வந்து மண்சாலையில் நிற்க, தபதபவென்று எல்லோரும் குதித்தார்கள்.

பூச்சி ராக்கெட்டைச் சுற்றிச் சட்டை போடாத பெரியவர்கள், சின்னப் பையன்கள் இருபது. முப்பது பேர் சூழ்ந்திருக்க...

''பயந்து பயந்து சரியாகவே பரீட்சை எழுதவில்லை நான்!''

''ஏன்?''

''பரீட்சை ஹாலின் மத்தியில் அமர்ந்திருந்த சூபர்வைசருக்கு மாறுகண். எங்கே பார்க்கிறார் என்றே தெரியவில்லை!'' -கே. வி. கோபால்



# Only for those who like to be sure






The VIP label. Your guarantee of comfort and confidence. Confidence that your anatomy demands from scientifically designed underwear.

Made from the choicest fabric. With the softness, the smoothness... and the feel that gives the VIP feeling.

Durable underwear from VIP.
A complete price range...
because every person
is important.




UNDERWEARS

CASHH-I-203

Distributors for the State of Tamil Nadu

**Modern Distributors, 21, Balfour Road, Kilpauk (Near Kellys), Madras-600 010**



திருச்சியில்
தரமான ரெடிமேட்
ஆடைகள் நியாயமான
விலையில் வாங்க
கிட்ஸ்
கார்னர்
தொலைபேசி
23933
35,சிங்காரத்தோப்பு,திருச்சி-620008



வீட்டுக்காரர்: (நண்பரிடம்) மெல்ல வருவேன் என்று சொல்லியனுப்பி யிருந்தீர்கள் அல்லவா? அதனால் அவல் வாங்கி வைத்திருக்கிறேன்!

அவர்களை விலக்கினார்கள்.

என்ஜினியர்கள் சோதித்தார்கள்.

விஞ்ஞானிகள் யோசித்தார்கள்.

எந்த நாட்டின் பெயரும் இல்லை. கொடியும் இல்லை. இப்படிஒரு ராக்கெட் இந்த விதத்தில் எந்த நாடும் தயாரிக்கவேயில்லை.

மெல்லக் கதவைத் திறந்து உள்ளே இரண்டு ஸ்பேஸ் ரிசர்ச் மனிதர்கள் சென்றார்கள். கசமுசாவென்று கம்ப்யூட்டர் பேனல்கள் ட்யூப்கள், வயர்கள், விளக்குகள், சிஸ்டங்கள், சாபூரி மொழியில் ஏதோ வாக்கியங்கள் வெளிப்பட்டுக் கொண்டிருக்க...

''ப்ரொஃபஸர்! இது என்னவென்று ஓரளவு என்னால் யூகிக்க முடிகிறது'' என்றார் இளம் விஞ்ஞானி.

''சொல்லுங்கள்.''

''கடந்த இருபது வருடங்களாக உலகம் முழுவதும் ஒரு விசித்திர இயக்கம் தீவிரமடைந்து வருகிறது. உலக வாழ்க்கை வெறுத்து, தற்கொலை செய்து கொள்வது போல.... உலகில் போர்களும், நவீன விஞ்ஞானத்தின் ஆதிக்கங்களும் மனிதனின் அமைதியான, நிம்மதியான வாழ்க்கையைக் கெடுப்பதாகக் கொதிக்கும் ஒரு படையினர் உலகையே அழிக்கத் திட்டம் போட்டு வருகின்றனர் இல்லையா?''

''போன மாதத்தில் ஐரோப்பா கண்டத்தில் நிடுநிப்பென்று ஒரு நாட்டையே சக்தி வாய்ந்த அணுக்கதிர் இயக்கக் குண்டுகளால் அழித்தனர். படித்தேன். அதுபோல...?''

''இந்த உலக அழிவுப் படையினரால் ஏவி விடப்பட்டிருக்கும் ராக்கெட்டாக இது இருக்கலாம்.''

''அப்படியென்றால் இது மாபெரும் விஷயம். பெரிய ஆபத்து. உடனடியாக இதை அழிக்க வேண்டும்.''

''ப்ரொஃபஸர், இதை நாம் அழிப்பதை விடக் கடலில் மூழ்கடித்து விடுவதுதான் சிறந்தது.''

''வாருங்கள் செய்தியைச் சொல்லித் தலைமை இடத்திலிருந்து உத்தரவு பெறுவோம்'' என்றார்.

இரண்டு பேரும் ராக்கெட்டிலிருந்து வெளியேறினார்கள்.

கண்டக்டர் அவர்களிடம் வந்தபோது...

''எங்கே போகணும்?'' என்றான்.

''சென்னைக்கு.எங்களிடம் உங்கள் இந்தியா பணமும், ஏன் உலகப் பணம் எதுவும் இல்லை. சொன்னால் ஆச்சரியப்படுவாய். நாங்கள் உங்கள் உலகத்திற்கு விருந்தாளிகள். எங்கள் உலகம் கிஜாட். உங்கள் இந்தியா நாட்டின் தலைவரைச் சந்திக்க வேண்டும். இனி கிஜாட்டிற்கும், உங்கள் கிரகத்திற்கும் போக்குவரத்து ஆரம்பித்துவிடும்.''

''சர்த்தான். மறை கழண்ட கேசா? காசை எடுய்யா.''

மட்கர் விழித்தான்.

''நீங்கள் பேசுவது சரியாகப் புரியாவிட்டாலும், எங்களை அவமதிப்பது போல் தெரிகிறது. நாங்கள் சாதாரண ஆட்கள் இல்லை. கிஜாட்டின் தலைசிறந்த விண்வெளி வீரர்கள். உங்கள் உலகத்திற்கு வருகை புரிந்திருக்கும் கௌரவ விருந்தினர்களை மரியாதையாக நடத்துங்கள்.''

''அண்ணே, வண்டியை நிறுத்து. இது சரிப்பட்டு வராது. மரியாதை வேணுமாம். கொடுப்போம்'' என்றார் கண்டக்டர்.

வண்டி நின்றது. எல்லாப் பயணிகளும் மட்கர், கட்கரைப் பார்த்துத் திட்டினார்கள். அவர்களுக்குச் சரியாகப் புரியவில்லை.

''பைத்தியம் மாதிரி வேஷம் போட்டிருனுங்க. திமிர்! புலவர் மாதிரி தூய தமிழில் பேசறதைப் பாருங்க. யோவ், இப்போ காசைக் கொடு. இல்லே கீழே இறங்கு.''

மட்கருக்குக் கொஞ்சம் புரிந்தது. தன்னை அவர்கள் நம்பவில்லை.

''இந்தக் காமிராவை வைத்துக் கொள். என்னிடம் பணம் இல்லை'' என்றான் மட்கர்.

வண்டியிலிருந்த ஒரு இளைஞன் பரிதாபப்பட்டு, ''ஏதோ ஃபாரினர்ஸ். எக்ஸ்சேஞ்ச் தீர்ந்து போச்சு போலிருக்கு. நான் அந்தக் காமிராவை வாங்கிக்கறேன். வண்டியை எடு'' என்று பிரச்னையைத் தீர்த்துவைத்தான்.

சென்னையில் இறங்கினார்கள் இருவரும்.

விசாரித்தார்கள்.

முதலில் மாநிலத்தின் முதல்வரைச் சந்தித்து விளக்கி, நாட்டின் தலைவரைச் சந்திக்க முடிவெடுத்து, மாநில முதல்வரின் வீட்டின் வாசலில் கூர்க்காவிடம்....

''நாங்கள் கிஜாட் உலக மனிதர்கள். அனுமதி உள்ளே. உங்கள் முதல்வரிடம் பேசிக் கொள்கிறோம்.''

''அதெல்லாம் முடியாது'' என்றான் கூர்க்கா.

மட்கருக்கு கூரிய மூக்கின் மேல் பாகத்தில் வந்தது கோபம். ''பார்த்தே ஆக வேண்டும்'' என்று கூர்க்காவை அறைய... அவன் விசில் ஊத... இரண்டு போலீஸ்காரர்கள் வந்து மட்கரைப் பிடித்தார்கள். சில மணிக்குப் பிறகு ஸ்டேஷனில் இன்ஸ்பெக்டரிடம்...

''ஐயா! நாங்கள் கிஜாட் உலகத்தைச் சார்ந்தவர்கள்.''

''முதல்ல உள்ளே லாக்–அப்ல வை. அப்புறமா கீழ்ப்பாக்கம் அனுப்பலாம்'' என்றார்.

மிகப் பெரிய கிரேன் ஒன்று அந்தப்பூச்சி ராக்கெட்டைக் கடலுக்குள் போட்டதும் விஞ்ஞானிகள் பெருமூச்சு விட்டனர்.

கிஜாட்டின் விஞ்ஞானிகள் கவலைப்படத் துவங்கினார்கள்!

# சிரிப்புக் கொத்து

மனைவி: "என்னங்க இது? காலைலே "பேண்ட்" சட்டையோடு ஆபீஸ் போனீங்க! இப்போ ஜட்டி பனியனோடு வரீங்க?"

கணவன்: "பத்திரிகைகளில் வருகிற ஜோக்கை நம்பி ஹோட்டலில் காசில்லாமல் டிபன்சாப்பிட்டேன்! அந்த முதலாளி என்னடான்னு மாவரைக்கச் சொல்லாமல் "பேண்ட்" சட்டையைப் பிடுங்கிட்டார்."

—எஸ். ரெங்கசாமி



நண்பர்: என்ன டாக்டர்! ஏன் டல்லா இருக்கீங்க?

டாக்டர்: ஒண்ணுமில்லே! ஒருதரம் உடம்பை செக்கப் பண்ணிக்கணும்! நல்ல டாக்டரா யோசிச்சிட்டிருக்கேன்.

நண்பர்: நீங்களே டாக்டர்தானே?

டாக்டர்: தெரியும்! ஆனால் என்பீஸ் அதிகமாயிற்றே!

—ஸ்ரீநிவாஸன்



"நீங்க பெண்வீட்டார் பக்கமா? இல்லே பிள்ளை வீட்டார் பக்கமா?"

"ஆளை விடுப்பா! இப்ப நான் டைனிங் ஹால் பக்கம்!"

வெ. சீதாராமன்

## இந்தப் பைத்தியம் எப்படி?

ஒரு பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் புதிய டாக்டர் நோயாளிகளைப் பார்வையிட வந்தார்.

முதல் அறையில் இருந்தவன் "ஹாய் டார்லிங்" என்று சொல்லிக் கொண்டு டாக்டரின் மேல் பாய்ந்தான்.

இவன் ஒரு பெண்ணைக் காதலித்து அவள் வேறு ஒருவனை மணம் செய்து கொண்டதால் இவனுக்குப் பைத்தியம் பிடித்துள்ளது என்று விளக்கினார் கூட வந்த அஸிஸ்டெண்ட்.

வேறு அறையில் நுழைந்ததும் மற்றொருவன் 'ஹோ, ஹோ ஹா' என்று கத்திக் கொண்டிருந்தான். "இவனுக்கு என்ன?" என்றார் டாக்டர். "முதல் அறையில் உள்ள பைத்தியத்தின் காதலியைக் கல்யாணம் செய்து கொண்டவன் இவன்" என்று விளக்கினார் அந்த அஸிஸ்டெண்ட்..

—எஸ். சந்திரசேகர்

கேள்வி: "நிருபர்களில் முட்டாள் யார்?"

பதில்: "முத்தக்காட்சியில் நடிக்கத் தயாரா என்று பத்மினி கோலாப்பூரியிடம் கேள்வி கேட்பவர்!"

-உ. ராஜாஜி

அவர்: "நான் யார் வீட்டுக்காவது போனால் அவங்க 'வாங்கோ'ன்னு சொல்லிக் கூப்பிடறதைவிட 'வணக்கம்' சொல்லி வரவேற்கிறதைத்தான் விரும்பறேன்!"

இவர்: "ஏன் அப்படி?"

அவர்: "'வாங்கோ' வில் 'Go' இருக்கு! 'வணக்கம்'ல 'Come' தானே இருக்கு!"

-பி. பூபால் சிங்



கிழவர் 1: "கைத்தடி இல்லாதபோது எதையோ இழந்தது மாதிரி இருக்கு!"

கிழவர் 2: "வேறு எதை... அந்தக்கைத் தடியைத் தாங்க இருக்கும்!"

—உ. ராஜாஜி

## நாணயமுள்ள திருடன்!

சிறைச்சாலையிலிருந்து கைதியை நீதிமன்றத்துக்கு அழைத்து வரும் வழியில், காவலர்களுக்கு 'டிமிக்கி' கொடுத்துவிட்டு துலிப் நவே தப்பியோடி விட்டான். ஆத்திரம் அடைந்த மாஜிஸ்திரேட், அஜாக்கிரதையை வன்மையாகக் கண்டித்து விட்டு அடுத்த குற்றவாளியை ஆஜர் செய்யும்படி உத்தரவிட்டார். அப்பொழுது தலைதெறிக்க ஓடோடியும் வந்து மாஜிஸ்திரேட்டின் எதிரில் பணிவோடு கைகட்டி நின்றான், துலிப் நவே. குழுமியிருந்தோர் பிரமித்தனர்.

நவே கூறினான்: "ஒரு சைக்கிளைத் திருடிய குற்றம் என் மீது சுமத்தப் பெற்றுள்ளது. குற்றத்தைகோர்ட்டாரிடம் ஒப்புக்கொண்டு தண்டனையை ஏற்றுக் கொள்ளும் நோக்கத்துடன்தான் வந்தேன். ஆனால் வரும் வழியில் தெருமுனையில் நின்று கொண்டிருந்த என் தகப்பனார் மகனைக் காவலர் கைவிலங்கு பூட்டி அழைத்துச் செல்லும் அவலக் காட்சியைக் கண்ணுற்றதும் நிலை விழுந்து விழுந்து விட்டார். அவருக்கு உதவ யாரும் இல்லாத தால், நான்போலீசாரிடமிருந்து தந்திரமாகத் தப்பித்து, அவரை ஒரு ரிக்ஷாவில் ஏற்றி ஆஸ்பத்திரியில் சேர்த்து விட்டு இதோ ஓடோடி வந்திருக்கிறேன்."

சொன்னவர்: துலிப் தாஸ்

எழுதியவர்: 'கல்கத்தாமிக்கி'

ஒரே கோட்டில் வரையப்பட்ட படம். இது எங்கே தொடங்கி எங்கே முடிகிறது என்று கண்டுபிடியுங்கள்!

# நீங்கள் சாமர்த்தியசாலியா?

ஒரு கண்ணாடியின் முன் இந்தப் பக்கத்தை வைத்துக் கொள்ளுங்கள். ஒரு பென்சிலால் அம்பு முனையில் இருந்து தொடங்கி, பாதை வழியே ஒரு கோடு இழுத்துக் கொண்டு வர வேண்டும். இரண்டு நிபந்தனைகள்: கண்ணாடியைப் பார்த்தபடியேதான் வரைய வேண்டும். பாதையின் பக்கங்களில் பென்சில் தொடக்கூடாது.

மூன்றாவது முயற்சியிலாவது வெற்றி பெற்று விட்டால் நீங்கள் சாமர்த்திய சாலி தான்!




## எத்தனை F கள்?

கீழே தரப்பட்டுள்ள வாக்கியத்தை இயல்பான வேகத்தில் படிக்கும்போதே அதில் எத்தனை F கள் இருக்கின்றன என்று எண்ணுங்கள். ஒரே ஒரு தடவை தான் படிக்கலாம் :

Finished files are the result of years of scientific study combined with the experience of years.

சராசரி வாசகர் வெகு சுலபமாக மூன்று F களைக் கண்டு கொள்வார்கள். நான்கு F களைக் கண்டு பிடித்தால் நீங்கள் சற்று முன் ஜாக்கிரதை உள்ளவர் என்று அர்த்தம். ஆழ்ந்து கவனமாகப் படிப்பவர் ஐந்து F களை கண்டு கொள்ளலாம். இதிலுள்ள ஆறு F களையும் முதல் தடவையிலேயே கண்டு பிடித்து விட்டால் நிச்சயமாக நீங்கள் ஒரு ஜீனியஸ்தான்.

- எம். [illegible]



# ருக்குவின் கல்யாணம் குறையின்றி நடக்கும்

## 12.4.81

'இந்தக் குடும்பத்துக்கு நான் கொஞ்சமும் பிரயோஜனமில்லாமல் இருக்கிறேனே...'

பொழுது விடியும்போதே மனத்துக்குள் புலம்பிக் கொண்டு எழுந்திருந்தார் சர்மா.

பாயைச் சுருட்டி, ரேழி மூலையில் வைத்து விட்டுத் தாழ்வாரத்தைத் தாண்டித் தோட்டத்துக்குப் போகும்போது அவர் காதுபட மருமகள் மங்களம் கத்த ஆரம்பித்தாள்.

''வயசான காலத்தில் எல்லாருமா வீட்டோடு உட்கார்ந்திருக்கா? எத்தனை பேர் தர்ப்பக் கட்டை எடுத்துண்டு மந்திரம் சொல்லி நாலு காசு சம்பாதிக்கிறதில்லே?''

சர்மாவுக்கு அப்போதுதான் தான் முழுச் செவிடாகிப் போயிருக்கக் கூடாதா என்ற வருத்தம் பொங்கியது.

பாழாய்ப் போகிற பாரிச வாயு வந்து உடம்பின் வலப்புறம் முழுவதும் இழுத்துக் கொண்டு பிறகு தெய்வாதீனமாய் ஓரளவு சரியாகி விட்டாலும், வாய் குழறல் மட்டும் நிற்காது போய்விட்ட நிலையில் அவர் சொல்லும் மந்திரங்கள் செல்லுபடியாகுமா?

திரும்பவும் அவர் ரேழி மூலையில் உட்கார்ந்தபோது கிரிக்கெட் மட்டையுடன் வாசலிலிருந்து உள்ளே வந்தான் பேரன் நந்து.

''தாத்தா! நான் இன்னிக்கு நாற்பத்தி ஒன்பது ரன் எடுத்தேன்!''

சர்மா அவனைப் பெருமை பொங்கப் பார்த்தார். அப்போது நந்துவும்தன் தாத்தா மார்கழிக் குளிரில் உடம்பில் சட்டை கூட இல்லாமல் மூச்சு விட அவஸ்தைப் படுவதைப் பார்த்தான். எழுந்து சென்று பாய்க்குப் பக்கத்தில் வைக்கப்பட்டிருந்த போர்வையை எடுத்து அவர் முதுகைச் சுற்றிப் போர்த்தி விட்டான்.

''பாவம் தாத்தா! எத்தனை நாளாய் உங்களுக்கு இதே கிழிசல் போர்வை?'' என்று உண்மையாய் வருந்தினான்.

சர்மா மெலிதாகச் சிரித்து விட்டுப் பேரனின் தலையை வருடினார். சிலுப்பிக் கொண்டு சின்னதாய்ச் சீற ஆரம்பித்தான் நந்து.

''ஆனாலும் இந்த ருக்கு அக்கா ரொம்ப

வண்ணம் வாசலுக்கு விரைந்தாள் நிர்மலா.

''ஏய் நிம்மி! வாடி இங்கே.... ஏண்டி இப்படி லொட்டுனு லோட்டாவை வைக்கிறே? இவர் நம்ம தாத்தாடீ.... ஞாபகம் வச்சுக்கோ...''

''ஆமாம்.... போடா.... பெரிசாப் பரிஞ்சிண்டு வந்துட்டான். இவருக்கு மரியாதையா சிசுருஷை செய்ய நமக்குச் சொத்து, சுகம் சேர்த்து வைச்சிருக்காராக்கும்? பைசாகாசுக்கு வக்கில்லே....''

அவ்வளவுதான். நந்து பக்கத்திலிருந்த சிலேட்டை நிர்மலாவின் தலையை நோக்கி வீசி எறிய, அவள் நெற்றியில் ரத்தம் கசிய ரகளை ஆரம்பித்து விட்டது.

மாட்டுப் பெண்ணும் பேத்திகளும் ஒன்று சேர்ந்து சர்மாவைத் திட்டித் தீர்த்தார்கள்.

அக்ரஹாரக் கோடியில் ஏதோ பஜனைக் கோஷ்டி பாடிக்கொண்டு வந்து கொண்டிருப்பது தெரிந்ததும் அதை ஆவலாய்க் கவனிக்க ஆரம்பித்தார் சர்மா.

திருப்பதி போகிற கோஷ்டி என்றபோதே சர்மாவுக்கு உடம்பு புல்லரித்தது. அவருடைய நீண்ட நாள் ஆசை ஒரே ஒருதடவையாவது திருப்பதி ஆண்டவனைத் தரிசித்து மகிழ்வது.

'ம்... நமக்கு அந்தக் கொடுப்பினை இல்லை!'

''தாத்தா! நாளைக்கு நம்ம ஊர் ரணப் பிரட்டியிலிருந்து இருபது பேர் ஒன்றாய்த் திருப்பதி போய் வரப் போறோம். டிக்கட் கூட வாங்கியாச்சு...'' என்று சர்மாவின் அருகில் வந்து அக்கறையாய்ச் சொல்லி விட்டுப் போனார், ரங்காச்சாரி.

ஆசீர்வாதம் செய்கிற பாவனையில் கை தூக்கி மெல்லப் புன்னகைத்தார் சர்மா. ஏனோ அவரையும் அறியாமல் கண்களில் ஜலம் சேர்ந்து விட்டது. அதை ரங்காச்சாரி கவனித்து விட்டுத்தான் போனார்.

பெருமூச்சுடன் அவர் திரும்பவும் வந்து ரேழியில் உட்கார்ந்தபோது, அதற்காகவே காத்திருந்த மாதிரி ருக்கு அவர் அருகில் வந்து உட்கார்ந்தாள்.

சர்மாவுக்கு வியப்பாகி விட்டது.

''தாத்தா....'' ருக்கு நிதானமாய், அன்பாய்க் கூப்பிட்டாள்.

''ம்?'' என்றார் சர்மா தயங்கிய குரலில்.

''வந்து...வந்து... என்னை இரண்டுநாளில் பெண் பார்க்க வரப் போறா...''

''அட! அட! சொல்றப்பவே உன் கன்னம் சிவக்கிறதே, ருக்கு! பையன் யாரும்மா?''

''ரயில்வே கிளார்க். குமார் சம்பளம், கையில் இ

ரட்டை வடம் சங்கிலியைக் கொடுத்தாளாம். அந்த அஞ்சு பவுனை எங்கே வச்சிருக்கேள்?'' சர்மா அதிர்ந்து போனார்!

''ருக்கு! பத்து வருஷம் முன்னாடி திடீர்னு நெஞ்சு வலின்னு சொல்லி ஆபீஸ் விட்டு வந்த உங்கப்பா ஒரு மாதம் ஆஸ்பத்திரியில் கிடந்தபோது நேர்ந்த செலவுக்கும், பிறகு அவன் போய்ச் சேர்ந்த 'காரியங்களுக்கும் அந்த நகையை வித்த பணத்தில்தானேம்மா சமாளித்தேன்? அப்போ நம்ம யார் கையி லும் பணமும் இல்லாத நிலைமையில் அவ சரத்துக்கு உதவாமல் எதற்கு என்று நான் வித்துட்டேன், ருக்கு!''

'விருட்'டென்று எழுந்து நின்றாள் ருக்கு.

''அதெப்படி நீங்க என் அம்மாவுக்குச் சேர வேண்டிய நகையை அவளிடம் கூட ஒரு வார்த்தை கேட்காமல் விற்கலாம்? இது என்ன நியாயம்?''

மறுநாள்காலே ரேழிக்குக் கஞ்சிலோட்டா மணி பத்தாகியும் வந்து சேராதபோது சர்மா புரிந்து கொண்டார். அதுவரை அவ ருக்கு இரண்டு வேளை அரிசிக் கஞ்சி கிடைத்து வந்ததும்கூட அவரிடம் அஞ்சு பவுன் நகை இருப்பதாய் நினைத்த மதிப்பில்தானா?

நந்து வந்து விசாரித்தான்.

''தாத்தா.... இன்னிக்கு நான் ஒரு ரவ கூட எடுக்கலே. ஆமாம், கஞ்சி சாப்பிட் டேளா?''

பலமாகத் தலை ஆட்டினார், சர்மா. அந்தப் பத்து வயதுப் பாலகனிடம் உண்மையைச் சொல்லவும் அஞ்சினார். விஷயம் தெரிந்தால் நந்து புயலாய்ப் பாய்ந்து விடுவான்.

''நந்து.... நீ ஸ்கூல் போப்பா... நேர மாயிடும்....''

வாசல் திண்ணைக்கு வந்து உட்கார்ந்த போதுகூட அவருக்குத் தம் இயலாமையில் தான் வெறுப்பு மேலிட்டது.

''தாத்தா...''

ரங்காச்சாரி மூச்சிரைக்க ஓடிவந்தார்.

''என்ன ரங்கா? ஏன் இந்தப் பரபரப்பு?''

''தாத்தா... கடைசிச் சமயத்திலே ராமைய்யர் காலே வாரி விட்டுட்டார். அவர் மச்சினிக்குப் பெங்களூரில் சீரியஸாம். தந்தி வந்ததும் மனுஷன் புறப்பட்டுப் போயிட் டார். இனிமேல் அவர் டிக்கட்டை கேன்சல் பண்ணவும் நேரமில்லே. நீங்க வரேளா இருப்பதிக்கு?''

சர்மாவுக்கு உடனே முகம் பூரித்துப் போனது. ஆனால் டிக்கட் காசு?

''தயங்காதீங்கோ... நீங்க என் தகப்பனார் மாதிரி. உங்களை நான் அழைச்சிண்டு போறேன். செலவு என்னோடது. நீங்க இன்னும் அரை மணியில் தயாராயிடுங்கோ. கரூர் போய் அங்கிருந்து கிளம்பணும்... சீக்கிரம்.....''

சர்மா குதூகலமாய் ரேழிக்கு நடந்து வந்தவர் தம் கிழிசல் வேஷ்டியை அவசர அவசரமாய்த் தைக்க ஆரம்பித்தார்.

மங்களம் கிண்டலாய்ச் சீண்டினாள்.

''ஓசிப் பயணம்! ம்...இதுக்கும் கொடுத்து வைச்சிருக்கணும்! குடும்பத்துக்கு அஞ்சு



பவுன் சமயத்துக்குக் கொடுக்க வகையில்லேன்னாலும் ஒசியில் ஊர் சுற்றவும் சிலருக்கு அதிர்ஷ்டம் வாய்க்கிறதுடியம்மா!''

சர்மா வேதனையுடன் தம் சிறு மூட்டையை எடுத்துக் கொண்டு எழுந்திருந்தார்.

''வரேன், மங்களம்... நிர்மலா... போய் வரேம்மா....''

ஒருவரும் அவரைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் முகத்தைச் சுழித்துக் கொண்டு உள்ளே போய்விடவும், சர்மாவுக்குச் சங்கடமாய் இருந்தது.

''நந்தா....'' என்று கூப்பிட்டார்.

''அவன் பள்ளிக்கூடம் போயிருக்கிறான். மகா சக்கரவர்த்தியை வழியனுப்ப வர மாட்டான்....''

மங்களம் சமையல்கட்டு அதிர வெடித்தாள்.

சர்மா கண்ணைத் துடைத்துக் கொண்டு சாலைக்கு வந்தார்.

● ● ●

திருப்பதியில் தெய்வ சந்நிதானத்தில்கூட சர்மா, ருக்குவின் கல்யாணம் குறைவின்றி நடைபெறப் பிரார்த்தித்துக் கொண்டார்.

''கடவுளே... அந்த அஞ்சு பவுனுக்கு நீ ஏதாவது வழி பண்ணு.''

கீழத் திருப்பதி செல்லும் பஸ்ஸில் எல்லோருடனும் சர்மாவும் ஏறிக் கொண்டார்.

இறங்கும் பாதையில் பஸ்டிரைவர் அத்தனை வேகம் எடுத்திருக்கக் கூடாதுதான். ப்ரேக் பிடிக்க முடியாமல் நிலைமை எல்லை மீறிய போது பஸ் அந்த மலைப் பாதையில் புரண்டு குட்டிக்கரணம் போட்டது.

● ● ●

''சாமிநாத சர்மா என்பவரின் வீடு தானே இது? அவர் உயிருக்கு நஷ்ட ஈடாய் ஆந்திரா கவர்ன்மெண்டும், அந்தத் தனியார் துறை பஸ் நிர்வாகமும் சேர்ந்து கொடுத்துள்ள ஆறாயிரம் ரூபாய் செக்கைப் பெற்றுக்கொள்ளுங்கள்....''

மங்களம் கையெழுத்திட்டுப் பெற்றுக் கொண்டாள்.

''அஞ்சு பவுன், அஞ்சு பவுன்னு அவரைக் குத்திக் காண்பிச்சே சாகடிச்சங்கடி ராட்சசிகளா.... தாத்தா சாகறச்சே அதுக்கு வழி பண்ணிட்டுத்தான் போயிட்டார். இனி மேலாவது திருப்தியா இருங்கோ...''

நந்து மனம் வெதும்பிக் கத்திவிட்டுப் புரண்டு அழ ஆரம்பித்து விட்டான்.

# "காம்ப்ளான் ஒண்ணுதான் சரி என் குடும்பத்துக்கு ...திட்டமிட்ட பரிபூரண உணவு."



"பல வேளைகள் சாப்பிடத் தவறி விடும் என் கணவருக்கு"



"சாப்பிடும்போது சண்டித்தனம் செய்யும் என் மகனுக்கு"



"நோயுடல் தேறிவரும் என் தாயாருக்கு"

## காம்ப்ளான் ஒன்றுதான் எவருக்கும் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களால் முழுமை பெற்றது.

காம்ப்ளான் ஒன்றுதான் திட்டமிட்ட விஞ்ஞானக் கலவையாக உடலுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களை அளிக்கிறது: புரதங்கள், கார்போ-ஹைட்ரேட், கொழுப்புச் சத்து, வைட்டமின்கள், உலோக தாதுக்கள். எனவேதான், டாக்டர்கள் பெரும்-பாலும் சிபாரிசு செய்யும் ஆரோக்கிய பானமாக விளங்குகிறது காம்ப்ளான்.

கிடைப்பவை நால்வகை: இன்சுவை ரகங்களாக— சாக்கலேட் காம்ப்ளான், ஏலக்காய்-குங்குமப்பூ காம்ப்ளான், ஸ்ட்ராபெர்ரி காம்ப்ளான், தவிர சாதா காம்ப்ளான்.



"அசதியினால் சரிவர சாப்பிட முடியாத எனக்கு"




## திட்டமிட்ட பரிபூரண உணவு
# காம்ப்ளான்®

லின்டாஸ்-GLC. 10-2015 TM



✠ ''இங்கேதான் வரிசையா சுவாமி படங்கள் மாட்டப் பட்டிருக்கும்...''

# நடிப்பும் படிப்பும்



## நடந்து வந்த பாதை

ஸ்ரீப்ரியாவின் பழைய வீடு மயிலாப்பூரில் இருக்கிறது. ஃபிளாட் முறையில் கட்டப் பட்ட வீடு. கீழே ''ஏ'' ஃபிளாட்டில் தங்கி யிருந்தார் ஸ்ரீப்ரியா. படிப்பும்நடிப்பும் கலந்த வாழ்க்கையை அங்குதான் அனுபவித்தார். உள்ளே நுழைந்ததும் முதலில் ஸ்ரீப்ரியா என்னை அழைத்துக் காண்பித்தது அவரது தனியறை. மொத்தம் அந்த வீட்டில் இருந்ததே மூன்று அறைகள்தான். வாசலி லிருந்து இடது பக்கம் நுழைந்தால் ஸ்ரீப்ரியா வின் அறை. அங்குதான் அவர் படிப்பு, படுக்கை, விளையாட்டு எல்லாமே.

''அப்போது நான் சர்ச் பார்க் கான் வெண்டில் எட்டாவது படித்துக் கொண் டிருந்தேன். இந்த வீட்டில் நாங்கள் நான்கு வருடங்கள் இருந்தோம். இந்த அறையில் குப்பை கூளம் அதிகம் இருக்கும். ஒரு பக்கம் பழைய பேப்பர்கள், மற்றொரு பக்கம் சலவைக்குப் போகவேண்டியதுணிகள்; வேறொரு பக்கம் பல ஜோடி செருப்புக்கள். வீட்டில் தேவையில்லாத சாமான்கள் எல் லாமே என் அறைக்குத்தான் வந்து சேரும். இத்தனைக்கும் நடுவில் விரிப்புக்களுடன் ஒரு கட்டில். பரீட்சைக்குப் படிக்கும் நாட்களில் என் தகப்பனார் விடியற்காலையிலேயே என்னை எழுப்பி விட்டு விடுவார். நானும் சர்வ சகஜமாக எழுந்து புத்தகத்தைப் பிரித்து வைத்துக் கொள்வேன். நான் தனியாக இந்த அறையில் உட்கார்ந்து புத்தகத்தில் ஆழ்ந்திருப்பதை யார் பார்த்தாலும் நான் கஷ்டப்பட்டுப் படிக் கிறேன் என்று எண்ணு வார்கள். அப்பா, பெண் படிக்கிறாளா? இல்லே தூங்குகிறாளா?' என்று அவ்வப்போது பார்க்க வருவார். நான் தூங்க வில்லை என்பதற்குச் சாட்சியாகக் காலே ஆட்டிக் கொண்டிருப் பேன். அப்பாசந்தோஷத் துடன் ஓசைப் படுத்தா மல் சென்று விடுவார். ஆனால் நான் எல்லாரும் நினைப்பதுபோல்படித்துக் கொண்டிருக்க மாட்டேன். தூங்கிக்கொண் டிருப்பேன்! காலே ஆட்டிக் கொண்டே தூங்கும் பழக்கம் அன்றிலிருந்து இன்று வரை எனக்குண்டு!

''இந்த அறைக்குப் பக்கத்தில் இருக்கும் அறைக்குச் சென்றால், டெலிபோன். போன் மட்டுமென்ன, மற்ற எல்லாப்பொருள்களுமே அங்குதான். அதுவே வீட்டில் உள்ளவர்கள் இரவு படுக்கும் அறையாகவும் விளங்கியது.

''பக்கத்து வீட்டுக்காரர்கள் எல்லாருமே எங்களைக் கரித்துக் கொட்டுவார்கள். கார ணம், நாங்கள் போடும் சத்தம்தான். பாட் டுக் கற்றுக் கொள்கிறோம், நடனம் ஆடு கிறோம் என்று அவர்கள் தூக்கத்தை மட்டு மல்ல, நிம்மதியையும் கெடுத்ததாக அவர்கள் நினைத்தார்கள். இந்த அறையில் தான் பயிற்சிகள் எல்லாமே நடக்கும்.

''இந்த இரண்டு அறைகளையும் தாண்டி அப்பால் இருப்பதுதான் சாமி அறை. சாப்பிடும் அறை என்றும் குறிப்பிடுவோம். சமயத்துக்கு ஏற்ப அதன் பெயர் மாறும். இந்த இடத்தில்தான் சுவாமி படங்கள் வரிசையாக மாட்டப்பட்டிருக்கும். எனக்குச் சின்ன வயசிலிருந்தே தெய்வ பக்தி அதிகம்.



✖ ''மூலையில் உட்கார்ந்து, நாளெல்லாம் யோசித்து....''

பரீட்சைக்குப் படிப்பதை விட கந்தசஷ்டி கவசம் படித்தால் பாஸ் பண்ணி விடுவேன் என நினைப்பதுண்டு. எப்படியோ குருட்டாம் போக்கில் நாற்பது மார்க் வாங்கிவிடுவேன்.

''இந்த வீட்டில் இருக்கும்போதுதான் முதல் முறையாக ஷூட்டிங்குக்காகக் காஷ்மீர் சென்றேன். அந்தப் படத்தின் கதாநாயகர் ஜெயசங்கர். நாங்கள் ஏறிய விமானத்தில் ஏதோ கோளாறு நேர்ந்து விட்டதால் தாமதமாகத்தான் கிளம்பும் என அறிவித்தார்கள். அப்போது நான் கந்தசஷ்டி கவசம் சொல்லி மனத்தைத் திடப்படுத்திக் கொண்டேன். நல்ல வேளையாக ஒன்றும் நடக்கவில்லை. பத்திரமாகப் போய்ச் சேர்ந்தோம்.

''என்னுடைய இந்தச் சின்ன அறையில் தான் நான் திரைப் படங்களில் நடிக்கலாமா வேண்டாமா என்ற முடிவுக்கு வந்தேன். 'மாணிக்கத் தொட்டில்' படத்தில் நடிக்க அழைப்பு வந்தது. ஏற்பதா வேண்டாமா என ஒரே குழப்பம். கே. ஆர். விஜயாவின் ஐந்து பெண்களில் ஒருத்தியாக நான் நடிக்க அழைக்கப்பட்டிருந்தேன். 'முதல் படத்திலேயே இந்த மாதிரி சிறு வேஷத்தில் நடித்தால் எப்படி முன்னுக்கு வருவோம்?' இப்படி ஒரு பக்கம் மனம் கூற, 'உள்ளே நுழைந்து கொஞ்சம் கொஞ்சமாக முன்னேறலாமே!' என வேறொரு சிந்தனை. இந்த மூலையில் உட்கார்ந்து கொண்டு ஒரு நாள் முழுவதும் சிந்தித்தேன். கடைசியில் 'நடிக்க மாட்டேன்' என்று என் முடிவைக் கூறினேன். அதன் பிறகு எனக்கு நடிக்க அழைப்பு வந்த படம் 'முருகன் காட்டிய வழி'.

''நான் சமையலறைப் பக்கமே அன்றும் சரி, இன்றும் சரி, போவதில்லை. எனக்குச் சாப்பாட்டு அறைதான் தெரியுமே தவிர, சமையலறை தெரியாது!''

ஸ்ரீப்ரியா பேசிக் கொண்டே இருக்கையில் அவர் வந்திருக்கும் செய்தி அந்தத் தெரு முழுவதும்பரவ, கூட்டம் எக்கச் சக்கமாகக் கூடி விட்டது. போதுமடா சாமி! பரபர வென்று படங்கள் எடுத்துக் கொண்டு கிளம்பி விட்டோம். —''சலன்''

படங்கள்: சுபா நாகையா



✖ படிப்பது போல் பாசாங்கு செய்தது இங்கேதான்!''

## ஸ்ரீராம் சேமிப்பில் சேருங்கள்–
## சீரும் சிறப்புமாய் வாழுங்கள்!
# அன்பளிப்பு 10 கிராம் வெள்ளிப்பதக்கம் பெறுங்கள்



நீங்கள் டெபாஸிட் செய்யும் ஒவ்வொரு ரூ. 5,000 த்திற்கும் அழகிய வெள்ளிப் பதக்கம் அன்பளிப்பாகத் தருகிறோம்.

மே 15 வரை மட்டுமே இந்த அன்பளிப்பு உண்டு.

மகாலட்சுமியின் திருஉரு பதித்த இப்பதக்கங்கள் உங்கள் பணப் பெட்டியிலும், பூஜை அறையிலும் பாதுகாக்க உகந்தவை.

**அறிமுகப்படுத்துபவர்களுக்கும் அன்பளிப்பு**

டெபாஸிட் செய்பவர்களை அறிமுகப்படுத்துபவர்களுக்கும் வெள்ளிப் பதக்கம் உண்டு. நீங்கள் அறிமுகப்படுத்தும் ஒவ்வொரு ரூ. 5,000ம் டெபாஸிட்டுக்கும் ஒவ்வொரு அன்பளிப்பு உண்டு. (அறிமுகம் செய்துவைப்பவர்கள் எங்களுடைய குரூப் நிறுவனங்கள் ஏதாவது ஒன்றில் அங்கத்தினராக இருக்க வேண்டும்.)

**வெளியூர் அன்பர்களுக்கு**

வெளியூரிலிருந்து 'டெபாஸிட்' அனுப்புபவர்களுக்கு 'டெபாஸிட்' ரசீதுடன் வெள்ளிப் பதக்கம் பதிவுத் தபாலில் அனுப்பப்படும்.

**வட்டி விகிதங்கள்** — **வட்டி அளிக்கப்படும் முறை**

| டெபாஸிட் காலம் | மாதாமாதம் வட்டி பெற | 6 மாதங்களுக்கு ஒரு முறை வட்டி பெற | மறு முதலீட்டுத் திட்டத்தில் மொத்தமாக வட்டி பெற |
|---|---|---|---|
| 1 ஆண்டு | 14.0% | 15.0% | 15.5% |
| 2 ஆண்டுகள் | 14.5% | 16.0% | 17.5% |
| 3 ஆண்டுகள் | 15.0% | 17.0% | 20.0% |

**மறு முதலீட்டுத் திட்டம்** ரூ. 3,125—3 ஆண்டுகளில் ரூ. 5,000 ஆகிறது.

இந்தத் திட்டத்தின் கீழ் நீங்கள் ரூ. 3,125 டெபாஸிட் செலுத்தினால் மூன்று ஆண்டுகள் முடிவடைந்தவுடன் ரூ. 5,000ம் மொத்தமாகப் பெறலாம். உங்களை அறிமுகப் படுத்துபவர்களும் வெள்ளிப் பதக்கம் பெறலாம்.

**நம்பிக்கை—நாணயம்—அநுபவம்—உங்கள் டெபாஸிட்டிற்கு உத்திரவாதம்**

ஸ்ரீராம் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் நிறுவனம் பதிவு செய்யப் பெற்ற பார்ட்னர்ஷிப் (Registered Partnership) நிறுவனம். இந்த நிறுவனம் மோட்டார் வாகனங்களைத் தவணை முறையில் வாங்குபவர்களுக்குக் கடன் உதவி செய்கிறது. இத்துறையில் பதினைந்து வருட அனுபவமும் திறமையும் மிக்கவர்களால் நிர்வகிக்கப்படுகிறது.



**சலுகைகள்—ஆதாயங்கள்—பலன்கள்**

உங்கள் டெபாஸிட் தொகை பன்மடங்குப் பெருகுகிறது. உங்கள் அவசரத் தேவைக்குக் கடன் பெறலாம். ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் கம்பெனியில் சீட்டு எடுக்கும்போது இந்த டெபாஸிட் ரசீதை உத்தரவாதமாகக் கொடுக்கலாம்.

**குரூப் கம்பெனிகள்:**

ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி.லிட்.,
ஸ்ரீராம் பைனான்ஸ், ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் பைனான்ஸ் கம்பெனி லிட்.

உங்கள் செக்/டிராப்ட்டை அனுப்பும் முகவரி:

# ஸ்ரீராம் இன்வெஸ்ட்மெண்ட்ஸ்




தலைமை அலுவலகம்: 123, அங்கப்பநாயக்கன் தெரு, சென்னை-1

போன்: 28545—37890—21425

கிளை அலுவலகம்: 54, வடக்கு உஸ்மான் சாலை, தி.நகர், சென்னை-17. போன்: 441074

ADVAVE SI 1631

## 23. இந்திர லோகம்

நல்ல தூக்கத்தில் இருந்தஅவனும், தம்பி விசுவநாதனும் கண் விழித்தார்கள். பாண்ட் வாத்தியங்கள் முழங்கின. வெளியில் எட்டிப் பார்த்தபோது அரசாங்கப் பிரமுகர்கள் போல் சிலர் நின்று கொண்டிருந்தார்கள். ஓர் ஒலிபெருக்கி வைக்கப்பட்டிருந்தது.

அவனுக்கு ஒரு பழக்கம் உண்டு. தனது உடைமைகளைக்கூடத்தானே தூக்கிக்கொள்ள மாட்டான். தம்பி விசுவநாதன் தலையிலேயே அனைத்தையும் தூக்கி வைத்துவிட்டு, ''கீழ் இறங்கலாமா?'' என்றான்.

விமானத்துக்கு வெளியில் வந்து பார்த்த போது வேறு யாரோ ஒரு பெரிய மனிதரை வரவேற்கவே அவ்வளவு கூட்டமும் வந்திருப்பது போலவே தோன்றிற்று.

ஆனால், மாலை அவர்கள் கழுத்தில் விழுந்த வுடனேதான் வரவேற்பு தங்களுக்கே என்று அவர்கள் அறிந்தார்கள்.

ஒலிபெருக்கியில் வரவேற்றார்கள். பிறகு 'ரெக்டார்' தெ. பொ. மீ. அவர்களைப் பேசச் சொன்னார்கள். பிறகு அவனைப் பேசச் சொன்னார்கள். அவனோ, ஆங்கிலத்தில் ஐந்து நிமிஷம் பேசினான்.

காரில் ஏறியதும், ''நீங்கள் அழகாக ஆங்கிலம் பேசுகிறீர்கள்'' என்று அவனைத் தட்டிக் கொடுத்தார் ரெக்டார்.

அவர்களை வரவேற்று அழைத்துப் போனவர்களில் இருவர் துருக்மன் மாநில மந்திரிகள். ஒருவர் அருக்மேனிய மகா கவி. கூட இருந்தவர்களில் பல்கலைக் கழகப் பிரமுகர்களும், வானொலிப் பாடகியும் முக்கிய மானவர்கள்.

அஸ்காபாத்திலேயே ஒரு வசதியான ஹோட்டலில் அவர்களைத் தங்க வைத்தார்கள்.

அங்கே போன பின்தான் தெரிந்தது, டாக்டர் பத்மா சுப்பிரமணியம் குழுவினர் அங்கே வந்திருக்கிறார்கள் என்று.

டைரக்டர் கே. சுப்பிரமணியம் கெட்டிக்காரர். தம் குடும்பத்தையே கலைக் குழுவாக அமைத்து வந்திருந்தார். டைரக்டர் சுப்பிரமணியம், அறிவிப்பாளர், அவரது மனைவி சுதி கூட்டுகிறவர்; மகள் நீலு பாடகி; மகன் ரமணன் மிருதங்கம்; இன்னொரு பெண் வயலின்.

சோவியத் யூனியன் உட்படப் பதினொன்று நாடுகளில் அவர்களது கச்சேரிகள்.

டைரக்டர் சுப்பிரமணியத்தின் குழந்தைகள் அனைத்துமே அடக்கமானவை. அவர்களது முன்னேற்றத்துக்குக் காரணம் அதுதான்.

அவன் 'திடீர் தோசைப் பவுடர்' நிறையக் கொண்டு போயிருந்தான். பத்மாதான் காலையில் தோசை சுட்டுக் கொடுத்தார். காய்ந்து போன ரொட்டியையும், வெண்ணையையும் அவனால் தின்ன முடியாதே!

வெறும் மாமிசத்திலேயே விளையாடும் மேலைநாடுகளை, அந்தப் பிராமணக் குடும்பம், வெறும் காய்கறிகளாலேயே சமாளித்தது

✕ ருஷ்யாவில் ரோமப்புற நடனம்





## திருத்தம்

எனது இந்தக் கயசரிதையை வேறு ஒரு நபரைப் பற்றி எழுதுவது போல் ''அவன்'' என்றே குறிப்பிட்டு எழுதி வந்துள்ளேன்.

ஆனல் சென்ற இதழில் (3–5–81) சில இடங்களில் அவன் – அவனை – அவர்கள் என்று எழுதுவதற்குப் பதில் கவனக் குறைவாக, நான் – என்னை – நாங்கள் என்று குறிப்பிட்டு விட்டேன். நேயர்கள் தக்கபடி திருத்திக் கொள்ளு மாறு வேண்டுகிறேன். —கண்ணதாசன்

போல் அவனும் தோசை மாவினலேயே சமாளித்தான்.

. பச்சைக் கோழியை வெட்டி எண்ணெயில் தோய்த்துக் கொண்டு வரும் சோவியத் தயாரிப்பு அவனுக்கு ஒத்துக் கொள்ளவில்லை. ஆனல் முட்டையில் சுற்றப்பட்ட மாட்டுக் கொத்துக் கறி அவனுக்கு ஒத்துக்கொண்டது. அது முஸ்லீம் தயாரிப்பாக இருந்தது.

பாவம்,–ரெக்டார்! வேகாத சோறும், தயிருமாகக் காலம் தள்ளினர். விசுவ நாதனும், அம்பிகாபதியும் பச்சைக் கோழி யையே சுவைத்துத் தின்ருர்கள்.

சோவியத் யூனியனில் துர்க்மேனியா ஒரு அழகான மாநிலம். பன்னிரண்டு மாதங் களும் பெங்களூரைப் போல் சீஸன். குளிர்ந்த காற்றும் மஞ்சள் வெய்யிலும் அற்புதம். பெங்களூரைப் போலவே புஷ்பங்கள் நிறைந்த நாடு. அங்கே திராட்சைக்கு விலை இல்லை. ஒவ்வொரு வீட்டுப் பந்தலிலும் கேட்பாரில்லாமல் பழுத்துக் கிடந்தது.

சோவியத் யூனியன் மேலை நாட்டிலிருந்து தேவையான நாகரிகத்தை மட்டுமே கற்றுக் கொண்டது. அந்தந்த மாநிலத்தின் அழுத்த மான பழமைப் பண்பாடுகள் அப்படியே காப்பாற்றப்படுகின்றன.

பெண்கள் எல்லாம் கழுத்திலிருந்து கால் வரை பழங்கால ஆடைகளையே அணி கிருர்கள். ஆடவர்களும் அப்படியே!

பெண்களின் உடம்பு இலவம் பஞ்சைப் போல் மிருதுவாக இருக்கிறது. எல்லோரும் கூடுமானவரை கலகலப்பாகப் பேசு கிருர்கள்; பழகுகிருர்கள்.

ஆண் பெண் தவருன சேர்க்கைக்கு அங்கே வழி இல்லை. ஆனாலும் எங்கே எந்தப் பெண்ணைக் கண்டாலும் அவன் முத்தமிட ஆரம்பித்தான்.

'அது தமிழர்கள் வழக்கம் போல் இருக் கிறது' என்று அவர்களும் அனுமதிக்க ஆரம்பித்து விட்டார்கள்.

ஒரு கட்டத்தில் இது ரெக்டார் தெ. பொ. மீ.க்குக் கோபத்தை உண்டாக்கி விட்டது.

ஒரு கூட்டுப் பண்ணையில் கலை நிகழ்ச்சி. அங்கு எல்லோரும் போயிருந்தார்கள். அவர் களது மொழிபெயர்ப்பாளராக நியமிக்கப் பட்டிருந்தவர் 'ஜோரா' என்பவர். அவர் எங்கே பார்த்தாலும் அவனை முத்தமிடத் தூண்டுவார். அந்த நிகழ்ச்சியிலும் அப் படியே ஒரு பெண்ணைக் காட்டி, ''முத்தமிடு முத்தமிடு'' என்ருர்.

அவனும் அப்படியே மேடை மீது ஏறி அவளுக்குப் பூக்களைக் கொடுத்துவிட்டு அவ ளைக் கட்டி முத்தமிட்டான்! உடனே ரெக் டாருக்குக் கோபம் வந்து விட்டது. ஜோரா வைப் பார்த்து, "you are spoiling him" என்று கத்தினர்.

துருக்மேனியாவின் வனப்பையோ, மகி மையையோ அவன் காணவே யில்லை. சில பல்கலைக் கழக நிகழ்ச்சிகளிலும் கூட்டுப் பண்ணை நிகழ்ச்சிகளிலும் அவன் கலந்து கொள்ளவில்லை. 'வோட்கா'வைக் குடித்து விட்டு, அறையில் தூங்கிக் கிடந்தான்.

ஒரு கூட்டுப் பண்ணையில் ஒரு துருக் மேனியப் பெண்ணேடு முக்கால் மணி நேரம் தாளம் தப்பாமல் நாட்டியம் ஆடினன்.

சோவியத் யூனியனில் கூட்டுப் பண்ணை வெற்றி பெற்றதில் நியாயமான காரணங்கள் உண்டு.

போலித்தனமான ஜனநாயக வரம்பை விரிவு படுத்திக் கொண்டு, எவனும், எப்படி யும் நடக்க அனுமதித்து விட்டுக் கூட்டுப் பண்ணை நடத்தினல் வெற்றி பெருது. நூறு பேர் ஒரே மாதிரி சிந்தித்தால் கூட்டுப் பண்ணை வெற்றி பெறும்.

சோவியத் யூனியனில் பண்ணை மட்டு மல்ல; பண்ணை ஆளும் வெற்றி பெற்றிருக் கிருன். அவனது வீட்டுக்குள் டெலிவிஷன் என்ன, ரத்தினக் கம்பளம் என்ன, பதப் பெட்டி என்ன; அந்தப் பெட்டிக்குள் வகை வகையான மாமிசங்கள் என்ன – அவனுக்குச் சொந்தமாகத் தரப்பட்டிருக்கும் ஒரு ஏக்கர் நிலத்தில் அவன் விருப்பம் போல் பயிரிட் டிருப்பது என்ன, அவன் குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடம் என்ன, ஆடை அணி மணிகள் என்ன – காற்றேட்டமான அந்தப் பண்ணை யின் ஆரோக்கியம்தான் என்ன!

துருக்மேனியா ஈரான் நாட்டை ஒட்டி இருக்கிறது. அதன் குடி மக்கள் எல்லாம் நமது மலையாளிகளைப் போல் நிறம் கொண் டிருக்கிருர்கள். ஆறடிக் கூந்தல் அங்கே சர்வ சாதாரணம்.

பத்மா சுப்பிரமணியத்துக்கு துர்க்மேனியா பிரமாத வரவேற்பு தந்தது. அவனும் ஒரு நாள் நாட்டியத்தைப் பார்த்தான். சும்மா சொல்லக் கூடாது. பரத நாட்டியத்தில் புதிய புதிய உத்திகளைக் கையாள்கிருர். அவரது லேசான உடற்கட்டும் சேர்ந்து கொள்வதால், வைத்த கண்ணை எடுக்காமல் பார்க்கத் தோன்றுகிறது.

ஒருவர்: ''உன்பையன்களுக்குத் தான்வேண்டு தல்னு சொல்லி மொட்டை அடிச்சிருக்கே. பின்னே நீயும் ஏன் மொட்டை அடிச்சிருக்கே?''

மற்றவர்: ''ஐந்து மொட்டை அடித்தால் ஒரு மொட்டை இலவம்னு சொன்னுன் அதனல் தான்.''

ஈ. சோமசுந்தரம்



ஒரு இடத்தில் கைகளைப் பின்னுக்குக் கட்டிக் கொண்டு நாட்டியத்துக்கு இடையிலேயே நடை நடந்தபோது அவனும் தன்னை அறியாமல் கைதட்டி விட்டான்.
இன்று பத்மா உயர்ந்த இடத்தில் நிற்பது நியாயமானதே.
வடநாட்டிலிருந்து ஒரு நாட்டியக்காரியும் சிதார் வாத்தியக்காரியும் வந்திருந்தார்கள். இருவருமே அற்புதம்.
இந்தோ – சோவியத் கலாசாரக் கழகம் நல்ல திறமைசாலிகளைத் தேர்ந்தெடுத்து நாடெங்கிலும் அனுப்பி யிருந்தது.

அவனுக்கு அங்கே ஒரே ஒரு சங்கடம். இவ்வளவு திறமையான ரஷ்யர்கள் மற்றவர்கள் தனியாக ஊரைச் சுற்றிப் பார்ப்பதை ஏன் அனுமதிப்பதில்லை?
அவன் ஒரு நாள் தனியாக வெளியேறினான். தக்காளியும், முட்டையும் விற்கும் சில கடைகளைத்தான் கண்டான். ஒரே ஒரு மருந்துக் கடை இருந்தது. வேறு கடைகளைக் காணோம்.

அந்த மருந்துக் கடைக்குள் நுழைந்து பார்த்தான். நோயாளிகளிடம் கெட்ட நீரை உறிஞ்சும் அட்டைகள் நிறைய இருந்தன. ஒவ்வொரு அட்டையும் நம் ஊர்ப் பாம்பு மாதிரி இருந்தன. அங்கே வைட்டமின் 'பி' நம் ஊர் காராபூந்தி மாதிரி இருந்தது. ஊர், காரைக்குடி அளவிருக்கும். நான்கு தெருக்கள் சுற்றி விட்டு அவன் ஹோட்டலுக்குத் திரும்பிவிட்டான்.

துர்க்மேனியக் குழந்தைகள் பேரழகானவை. எப்படியாவது ஒரு குழந்தையைக் கொடுப்பார்களானால், ஊருக்குக் கொண்டு போகலாமே என்று எண்ணினான். அதைத் துர்க்மேனிய மந்திரி மறுத்து விட்டார்.
துர்க்மேனியாவின் உட் பகுதியில் மாரே, சர்ஷோ, தர்ஷாவுஷ் ஆகிய சிறு நகரங்களுக்கு அவர்கள் விஜயம் செய்வதாக ஏற்பாடு.

லேசான வெப்பக் காற்றோடு கூடிய கண்ணாடிப் பெட்டி ஒன்றை ரயிலில் அவர்களுக்காக ஏற்பாடு செய்திருந்தார்கள். அந்தப் பெட்டியில் எட்டு அறைகள். அவர்களோடு வந்த துர்க்மேனியர்களுக்காகஇரண்டு அறைகள், ரெக்டாருக்கும் அம்பிகாபதிக்கும் ஒன்று, அவனுக்கும் விசுவநாதனுக்கும் ஒன்று. ஒன்றில் டெலிவிஷன், ஒன்றில் ரேடியோ. ஒன்றில் பத்திரிகைக்காரர்கள்; ஒரு அறையில் பணிப் பெண்கள்.

ரயில் 'மாரே'க்கு ஏழு மணிக்குப் போகிறது. அவன் ஆறரை மணிக்கெல்லாம் தயாராகி விட்டான். ஆனால் விசுவநாதனோ நகரத்துக்குள் போய் பாத்-ரூம் போகலாம் என்றிருந்து விட்டான்.

அந்த ஊர் மிக மிகச் சிறிய ஊர். ஜனத்தொகையே பத்தாயிரம்தான். பாத்ரூம் உள்ள ஹோட்டலே கிடையாது! விசுவநாதனோ வயிற்றைப் பிடித்துக்கொண்டு தடுமாறினான்.
அவன் உட்கார்ந்து மாட்டுக் கறியும் முட்டையும் சாப்பிட ஆரம்பித்தான்.




ராஜஸ்தான் மாநிலத்திலுள்ள உதயப்பூரிலிருந்து 250 கிலோ மீட்டர் தூரத்தில் நூறுமீட்டர் உயரமுள்ள ஒரு மலை இருக்கிறது. இந்த மலை மீது தேன்களுக்கென்றே ஒரு காலனியை உருவாக்கியுள்ளார் ராபா டேமின் என்பவர். இவர் ஒரு வனவிலங்குப் பிரியர். தேன்கள் வசிப்பதற்கென்றே ஒரு காலனியை உருவாக்கியிருப்பது இதுவே முதல் தடவையாகும். ஆயிரக்கணக்கான தேன்கள் ஒரே இடத்தில் வசிக்கும் காலனி இது. தகவல்: சக்தி மணாளன்

''ஏன் அண்ணே காலையிலேயே இந்தத் தீனி திங்கறீங்களே'' என்று எரிந்து விழுந்தான் விசுவநாதன்.
அங்கிருந்து 'அமுதாரியா நதி'யில் படகில் பிரயாணம் செய்வதாக ஏற்பாடு. அமுதாரியா நதியின் ஒரு பிரிவான 'தேஹராகும்' கால்வாய் அது.
பன்னிரெண்டு மைல் பயணம். ஒரு கூட்டுப் பண்ணையில் கரை ஏறினோம்.
அடே அப்பா! விசுவநாதன் வெளியில் செல்ல அருமையான காடு. அங்கேதான் அவனுக்கு உயிர் வந்தது.
வழியில் ஒரு பெரிய மீன் கொடுத்திருந்தார்கள். அதை அந்தக் கூட்டுப் பண்ணைப் பெண்களைக் கொண்டு சமைக்கச் செய்தார்கள். அவர்கள் மீனைப் புட்டு அவிப்பது போல் அவித்து விட்டார்கள்.
ஆனாலும் விட்டு வைத்தார்களா விசுவநாதனும் அவனும்! ரெக்டார் பாவம், திராட்சைப் பழம் சாப்பிட்டார்!
ஊர் பத்தாயிரம் பேரைக் கொண்டதானாலும் அதற்கும் ஒரு மேயர் உண்டு. அங்கே ஒரு வரவேற்பு.
மாரே, சர்ஷோ, தஷ்தாவுஷ் – மூன்று ஊர்களிலும் இந்த வரவேற்பு நடந்தது.
மாரே – கலைஞர்களே அதிகம் வாழும் ஊர். சின்னச் சின்னப் பெண்கள் எல்லாம் கூட்டமாக வந்து அவர்களோடு படம் எடுத்துக்கொள்ள ஆசைப்பட்டார்கள்.
வேட்டி கட்டிய அம்பிகாபதிக்கு ஏகக் கிராக்கி.
நம் ஊரில் முப்பது வயதான பெண்ணைப் போல் அந்த ஊரில் பதினைந்து வயதுப் பெண் இருக்கிறாள்; வளர்ச்சி அப்படி!
இந்த மூன்று சிற்றூர்களிலும் பத்மா சுப்பிரமணியமும் வேறு வேறு நாட்களில் நிகழ்ச்சிகள் நடத்தினார்.
துர்க்மேனியாவில் பதினைந்து நாட்கள் இருந்த பிறகு அவர்கள் லெனின்கிராடுக்குப் புறப்பட்டார்கள்.
அவனும் துர்க்மேனியா பற்றி ஒரு கவிதை எழுதிக் கொடுத்து விட்டுப் புறப்பட்டான்.
(வளரும்)

# அறிமுகம்: நஸியா ஹஸன்

"ஆப் ஜெய்ஸா கோயி ஹை" — குர்பானி இந்திப் படத்தில் இடம் பெற்ற இந்தப் பாடலைப் பாடாத வாயே இல்லை என்று சொல்லலாம். அவ்வளவு பெரிய ஹிட் ஆயிற்று. இதுவரை வந்த இந்திப் படப் பாடல் ரிக்கார்டை முறியடித்தது இந்த இசைத் தட்டு. இத்தனைக்கும் இந்தப் பாடலைப் பாடிய நஸியா ஹஸன் இதுவரையில் திரையில் பாடாதவர். கராச்சியில் பிறந்த இவருக்கு இப்போதுதான் பதினைந்து முடிந்து பதினாறு வயது ஆரம்பமாகியுள்ளது. முஸ்லிம் மதத்தவர். இப்போது லண்டனில் உள்ள பர்மிங்ஹாம் உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருக்கிறார்.

அட்டைப் படத்தைப் பாருங்கள். குழந்தைத்தனம் மாறாத முகம். பேச்சு, நடத்தை எல்லாமே அப்படித்தான். வீட்டில் எப்போதும் டிஸ்கோ பாட்டும், கும்மாளமும் தான். கள்ளம் கபடமறியாத நஸியாவுக்குத் தேன் குரல் இறைவன் தந்த பரிசு. புகழ் குவிந்த பிறகும் பள்ளி மாணவியாகவே விளங்கும் நஸியா உடை அணிவதிலும் எளிமையையே கடைப் பிடிக்கிறார்.

நஸியாவுக்கு ஒரு தம்பி இருக்கிறான். பெயர் ஜோஹெப் ஹஸன். பதினைந்து வயது. ஜோஹப்பும் அக்கா மாதிரி அழகாகப் பாடுகிறான். கவிதை எழுதுகிறான். இசையமைக்கவும் செய்கிறான்.

குர்பானியில் முதல் பாடலைப் பாடிய நஸியாவுக்கு என்ன தோன்றியதோ, மேலும் பாட மாட்டேன் என்று சொல்லி ஊருக்குக் கிளம்பத் தயாராகி விட்டார். பல தயாரிப்பாளர், பணத்தோடு காத்திருந்தனர். பலர் அவரது அழகு முகத்துக்காகவும், இனிய குரலுக்காகவும் தங்கள் படத்தில் கதாநாயகியாக ஒப்பந்தம் செய்ய முன் வந்தனர். எல்லோருக்கும் 'டாட்டா' காண்பித்து விட்டு லண்டன் சென்று விட்டார் நஸியா.

இந்த முயற்சியில் கொஞ்சமும் விட்டுக் கொடுக்காமல் தொடர்ந்தவர்கள் எச். எம். வி. இசைத்தட்டு நிறுவத்தினர்தான். இந்த இனிய குரலை விட மனம் வரவில்லை அவர்களுக்கு. லண்டனிலே எப்படியோ நஸியாவிடம் சம்மதம் வாங்கி, 'டிஸ்கோ திவானே' என்ற பாடல்கள் அடங்கிய ஒரு இசைத்தட்டை வெளியிட்டுள்ளனர். வெளியிட்ட நாள், ஏப்ரல் மூன்றும் தேதி. நஸியாவின் பதினாறாவது பிறந்த நாள். இதில் பத்து டிஸ்கோ பாடல்கள் உள்ளன.

சென்னை எச். எம். வி. நிறுவனத்தைச் சேர்ந்த விற்பனை மானேஜர் திரு முகம்மது ஹஸன் கொடுக்கும் தகவல்கள் பிரமிக்க வைக்கின்றன:

"இதில் இடம் பெறும் பாடல்கள் எந்தத் திரைப் படத்திலும் வரவில்லை. பாடல்கள் எங்களுக்காகப் பிரத்தியேகமாக நஸியாவின் தம்பி ஜோஹெப் மற்றும் பிட்டு ஆகியோரால் இயற்றப்பட்டு, பிட்டுவால் இசை அமைக்கப்பட்டது. நஸியா பாடிய 'ஆப் ஜெய்ஸா' பாடலுக்கு இசையமைத்தவர்தான் இந்த பிட்டு. இதில் இடம் பெற்றுள்ள இந்தி டிஸ்கோ பாடல்களுக்கு, பாடல்கள் இந்தியப் பாணியில் இருந்தாலும் இசை ஆங்கிலப் பாணியில் உள்ளது. திரைப் படத்தில் இடம்பெறாத முதல் இந்தி டிஸ்கோ இசைத்தட்டு இதுதான். இந்தப் பாடலின் ரிக்கார்டிங் லண்டனில் உள்ள ஈ. எம். ஐ. ஸ்டுடியோவில் நடந்தது. 24 டிராக்குகள் கொண்ட ஸ்டீரியோ இதில் உபயோகப்படுத்தப்பட்டது. அதாவது ஒவ்வொரு இசைக் கருவியும் தனித் தனியாக ரிக்கார்ட் செய்யப்பட்டது. ஒப்பந்தப்படி இந்த ரிக்கார்டு ஒரே நேரத்தில் இந்தியா, இங்கிலாந்து, பாகிஸ்தான் நாடுகளில் வெளியிடப்பட்டது.

இந்தச் சிறப்புக்கெல்லாம் மகுடம் வைத்தது மாதிரி பெரிய சாதனையை நஸியாவின் குரல் செய்தது. ஆம்! ரிக்கார்ட் வெளிவந்த அன்றே லட்சம் ரிக்கார்டுகள் விற்றுப் போயின! இதுவரை இசைத்தட்டு உலகில் இது போன்ற சாதனை நடந்ததில்லை. எந்த இந்தித் திரைப்படப் பாடகர்–பாடகியும் இந்தச் சாதனையை நிகழ்த்தவில்லை. இந்தச் சாதனைக்காக விரைவில் நஸியாவுக்குத் தங்க முலாம் பூசப்பட்ட இசைத்தட்டு பரிசளிக்கப்போகிறோம்.." •

தாத்தாதான் நஸியாவை இசையில் ஈடுபட வைத்தார். எங்கு இசை நிகழ்ச்சி நடந்தாலும் நஸியாவை அழைத்துச் செல்வாராம். நஸியாவின் கவிதைகள் படிப்பதற்கு மிகவும் சுவையாக இருக்கும். சினிமாவில் அவருக்கு நடிக்க வந்த வாய்ப்பை உதறியதற்குக் காரணம், நடிப்பு என்றால் இவருக்கு அலர்ஜியாம். ஆனால் இசைமேல் மோகம். 'படிப்பிலே சுட்டி. பிடித்தபாடங்கள் பொருளாதாரம், வர்த்தக நிர்வாகம். இவரோடு ஜோஹெப் இந்த இசைத்தட்டில் சேர்ந்து பாடியிருக்கிறார். கோபமே வராதா நஸியாவுக்கு? வரும். தனியாக அமர்ந்து நஸியா பாடும்போது அவளை யாராவது தொந்தரவு செய்தால்! —பேட்டி: "ரிக்கி"



அட்டைப்படக் கட்டுரை

"நான் செக்ரெட்டரி
ஆகையால் ஸ்மார்ட்டாக இருக்கத்தக்க உடை அணிய வேண்டுமல்லவா."



உங்கள் அந்தஸ்தே தனி
அதற்கேற்ற துணி

ம:பத்லால்
:பேப்ரிக்ஸ்



ம:பத்லால் இண்டஸ்ட்ரீஸ் ம:பத்லால் :பைன்

MF-4:TAM

# கல்தூண்

இயற்கையான கிராமப்புற நிகழ்ச்சிகளைச் சிலர் சினிமாவில் புகுத்திப்புகழ் பெறப் போக இப்போது சினிமாவின்செயற்கைத்தனங்களைக் கிராமச் சூழலில் புகுத்திப் படம் எடுக்க ஆரம்பித்திருக்கிறார்கள்.

ரசிக்கத்தக்க நகாக வேலைகள் இல்லாத கல் தூண் மொட்டைப் பனைமரமாக நிற்கிறது.

வாலிபர் சிவாஜி சீக்கிரமே வயதான கோலத்தில் மிடுக்குக் குறையாமல் தோன்றுகிறார். சடுகுடு ஆடுவது, அப்போது நெஞ்சு வலிப்பதாய் நடிப்பது, கல்யாண நாள் சட்டையை அணிந்து கிழிப்பது; மகன் பெற்ற வெள்ளிக் கோப்பைகளை ரகசியமாய் ரசிப்பது; எல்லாம் ஆரம்பிக்கும்போதே முடிவை ஊகிக்க முடிகிறது என்றாலும் சிவாஜி காரணமாக ஐ.எஸ்.ஐ. முத்திரை பெறுகின்றன.

சிவாஜிக்கு கே. ஆர். விஜயா பக்க பலம். கே. ஆர். விஜயாவுக்கு அவர் புன்னகை பக்க பலம். இருவருமாகச் சேர்ந்து கல் தூண் ஒரேயடியாகச் சரிந்து விடாமல் பக்க பலம்.

நாகேஷ்...அதே பழைய நாகேஷ். அவர் முடிவெட்டும் காட்சி வெட்டி எறியப்பட்டிருக்க வேண்டிய காட்சி.

மேஜர் — டைரக்ஷனில் மைனர்.

உடுக்கு அடித்து சிவாஜி பாட.. ஃப்ளாஷ் பாக்கில் பழைய கதை கூறுகிறார்களே அப்போது சினிமா டெக்னிக்கிலும் பல வருஷங்கள் பின்னே போய்விட்டார்கள்!

வி.கே.ஆர். — மனோரமா வரும்போது நமக்குப் பெருமூச்சு வருகிறது: அப்பாடா! ரிலாக்ஸ்!

பெரிய கவுண்டர் மகனாகப் பிறந்து அவரையே எதிர்த்துக் கொள்ளும் பழனிச்சாமியாகத் தோன்றும் திலக், நடிப்பில் சிவாஜியை எதிர்கொள்ள முடியாமல்... தொபுகடீர்! சம ஆற்றல் உள்ளவரைப் போட்டால்தான் சிவாஜி நடிப்பும் ஜொலிக்கும் என்பது எப்போது புரியப் போகிறது?

ராகிங் காட்சி ரசிகர்களை ராக் பண்ணுகிறது.

தொட்டில் பாட்டுக்காகக் கண்ணதாசன் —எம். எஸ். வி.க்கு மட்டில்லா மகிழ்ச்சி தெரிவிக்கலாம்.

விசேஷப் பாராட்டு: ரோ...ரோ... ரொம்ப ஜோர் சதீஷ்! கி...கி...கி....கிப் இட் அப்!

—குட்டி கிருஷ்ணன்





# பணத்தை ஏன் விரயமாக்குகிறீர்கள்

## எவ்விதத்திலும் சிறப்பில்லாத 'விலையுயர்ந்த'
## துலக்கும் பவுடரை வாங்கி



## வாங்குவீர்

# பிஜ்

# மற்றதைவிட விலையில் 25% குறைவு
## இருப்பினும் நன்றாகவே துலக்குகிறது







உங்களுடைய
சிறந்த பீங்கான்,
சமையலறைப்
பாத்திரங்களுக்கு
நம்பகமானது

**கோத்ரெஜ்**
தயாரிப்பு

CASGS-132-183 TAM

# வட்டமேஜை

● 'ஸ்ரீராமஜெயம்' போட்டியை அறிவித்த தன் மூலம் 'ஸ்ரீதேவி' போட்டிக்குப் 'பரிகாரம்' தேடிக் கொண்டீர்!

சிந்தாதிரிப்பேட்டை — பா. உதயா

● அதிகபட்சம் 'ஸ்ரீராமஜெயம்' எழுதுபவருக்கு ரூ. 500- பரிசு அளிக்கப் போகும் நீர், வேறொரு பக்கத்தில் குடையை மறக்காமலிருக்க 'பூஜை நேரத்தில் ஸ்ரீராமஜெயத்துக்குப் பதில் குடை, குடை என்று 108 தரம் ஜபிக்கவும்' என்று பிரசுரித்துள்ளீர்களே! ஸ்ரீராமர் தான் உம்மை மன்னிக்க வேண்டும்!

பாலக்காடு — எஸ்.வி.சுப்பிரமணியம்

● குடையைப் பாதுகாக்க எனக்குத் தெரிந்த ஒரே வழி அதனை எதிர்வீட்டு ஏகாம்பரத்திடம் கொடுப்பதுதான்! நான்கு வருடங்களுக்கு முன் ஒரு மழைக்கால முன்னிரவில் என்னிடம் இரவல் வாங்கிய குடையை இன்னும்கூட பத்திரமாக அவர் வைத்துக் கொண்டிருக்கிறார்!

சென்னை-35 — சி. பூபால் சிங்

● நாராயணசாமி இல்லாத எதிரொலிக்கு என்னைப் போன்ற பல நேயர்கள் எதிர்ப்புத் தெரிவித்துக் கொண்டிருக்கும் இந்த நேரத்தில் அதைப் பற்றிச் சில நேயர்களிடம் கேட்டு எழுதியது எங்களுக்கு ஆறுதலாக இருந்தது.

சென்னை — கலாமூர்த்தி

● எதிரொலியில் ஒருமுறை நிகழ்ச்சி பிடிக்காவிட்டால் உங்கள் செட்டை மூடுவதுதானே!' என்று ஆணவமாகப் பேசி பிறகு மன்னிப்பு கேட்டவர். நேயர்களின் கடிதங்களுக்குக் குறைந்த நேரம் தந்து விட்டு தான் ''லெக்சர்'' அடிக்க அதிக நேரத்தை எடுத்துக் கொண்டவர்.

ஒட்டேரி — சண்முக சுந்தரம்

● ஒரு பெரிய அரசு நிறுவனத்தில் ஒரே நபரைக்குறிப்பிட்ட ஒரேபதவியில் நெடுநாள் நீடிப்பதென்பது வழக்கமல்ல; விதிமுறைகளும் இடம் தரவில்லை. தன்னை விட்டால் வேறு கதி இல்லை என்ற உயர்வுமனப்பான்மை யாருக்கும் ஏற்படக் கூடாது என்பதோடு நியாயமில்லாமல் கூட அத்தகைய நபர் மீது வீண் புகார் வரவும் கூடும்.

ஆகையினால் பல ஆண்டுகள் ஒரு பதவியில் இருந்தவருக்கு மாற்றல் தருவது (நீக்கம் அல்ல!) எப்படித் தவறாகும்? அது ஒரு நிர்வாக ஏற்பாடு; அவ்வளவுதான்!

சென்னை — புத்தனேரி சுப்பிரமணியம்

● 'நாராயண துதி' கண்டேன். அவர் திறமைசாலிதான். ஆயினும் அந்நிகழ்ச்சியைப் பல பேர் நடத்த அனுமதித்ததால் தானே அவரை விடத் திறமையுள்ளவர்கள் வெளிப்பட வாய்ப்பு ஏற்பட முடியும்.

சென்னை-40 — மணவை முஸ்தபா

● 'நடுநிலை', 'அரசியல் சார்பற்ற' பத்திரிகை என்று ''வாய்ப் பந்தல்''(!) போட்டவாறே டாட்டா-பிர்லா பட்டாளத்தின் ஒரு பட்டாளியாகும் கிர்லோஸ்கரின் 14 அம்சத் திட்டத்தைப் பத்திரிகையில் கொள்கை முழக்கம் செய்து கரண்டல் கும்பலின் அரசியலை வெளிப்படையாகப் பிரசாரம் செய்யக் கிளம்பி விட்டீர்களே, சபாஷ்!

மதுரை-12 — நவீனன்

● கிர்லோஸ்கரின் திட்டங்களை அரசு துணிந்து செயல்படுத்தினால் இன்னும் 50 ஆண்டுகளில் இந்தியா ஒரு முன்னேறிய நாடாகத் திகழும் என்பது உறுதி. ஆனால் நடக்கின்ற சோஷலிஸ ஆட்சி இத்திட்டங்களை ஏற்காது. 33 ஆண்டு கால காங்கிரஸ் ஆட்சி இந்தியனைத்திட்டமிட்டுப்பிச்சைக்காரனாக்கியதுதான் வரலாற்று உண்மை.

சிதம்பரம் — சிவ. ராஜகுமார்

● ''கல்வி இளைஞர்களைக் கவரத்தான் செய்கிறது, கெடுக்கவில்லை'' என்ற அனிதாவின் நியூஸ் ஜூஸ் வரிகள் அட்சர லட்சம் பெறும்.

திருநெல்வேலி — ஜி. சதாசிவம்




● இத்துடன் 'டிட் பிட்ஸில்' வெளியான படத்தையும், 'நக்கீரன்' என்று கூறிக்கொள்பவரின் படத்தையும் இணைத்தனுப்பியுள்ளேன். இன்னொருவர் உருவத்தையே 'தன்னுடைய' உருவமாக ஏற்றுக் கொண்டிருப்பவர் பிறரைப் பற்றிக் குறை கூறுவது எந்த வகையில் நியாயம்?

பெங்களூர்-5 — அ. குமார்

● ராஜேந்திர குமாரின் ''பிரியமான தோழிக்கு'' சிறுகதை அருமை. முடிவு எப்படி இருக்குமோ எனப் பயப்பட வைத்து எதிர்பாராத முடிவால் வாசகரை வியப்பில் ஆழ்த்தும் அவருடைய தனிப் பாணிக்கு இக்கதை ஓர் எடுத்துக்காட்டு.

அரகண்டநல்லூர் — கே. பிரதாப் சிங்

● ''கலாசாமியின் கலாட்டா'' அட்டகாசமாக இருந்தது. மனம் விட்டுச் சிரித்தேன்.

கோவை — கிணத்துக்கடவு ரவி

● 'அன்புள்ள அத்தான்' படம் விமரிசனத்தில் விசுவநாதன் இசையைப் பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லையே! நளினி சாஸ்திரி என்ன ஷோபா மறைந்த ஏக்கத்தினால் அருமையான இரு பாடல்களைப் பற்றி எழுத மறந்துவிட்டாரா?

பழவந்தாங்கல் — ஆனைக்கூத்தன்

# வஸந்த்! வஸந்த்!

சுஜாதா

## 19. "ஏழே கால்!"

கணேஷ் உடனே உஷாராகி டெலிபோனைத் தட்டிப் பார்த்தான். அந்த முனைக்காரன் கிட்டத்தில் இருக்க வேண்டும் என்று தோன்றியது. சற்று நேரம் கேட்ட 'டயல் டோன்' வெட்டுப்பட்டு டெலிபோன் மவுனமாகியது. வெறும் காற்றுத்தான் கேட்டது. வெளியே யாரோ இணைப்புக்களைத் துண்டித்து விட்டார்கள். கணேஷ் வாயிற் கதவைப் பார்த்தான். உள்ளே தாளிட்டிருந்தது. என்ன செய்யலாம்? இரு சாத்தியக் கூறுகள்... கதவைத் திறந்து கொண்டு பத்திரத்தை நோக்கி ஓடிவிடலாம். இல்லை காத்திருந்து யார் வருகிறார்கள் என்று பார்க்கலாம். முதல் சாத்தியத்தில் பத்திரம். இரண்டாவது சாத்தியத்தில் துடிப்பு.

வேண்டாம். தனியாக இருக்கும்போது அசட்டுத் தைரியம் வேண்டாம். வஸந்த் இருந்தால் கதை வேறு. இப்போது மணி ஒன்பது. இந்தச் சீக்கிர ராத்திரியில் தைரியமாக உள்ளே நுழைந்து விடுவார்களா என்ன? மெல்ல வாயில் கதவை அணுகி அதன் தாளைத் திறக்க முற்படும்போது வெளியே தீர்மானமான, தெளிவான காலடிகள் கேட்டன.

வருகிறான். கதவு தட்டப்பட்டது. சலனமில்லாமல் நின்றான். ஜன்னல் வழியாக எட்டிப் பார்க்கலாம். வந்திருப்பது எத்தனை பேர்?

மென்மையாகத் திரைச் சீலையை விலக்கி எட்டிப்....

கொத்தாக அவன் காலரை இறுக்க ஒரு ஜன்னல் கரம் பிடித்து மூர்க்கத்தனமாக இழுத்து ஜன்னலுடன் ஒட்ட வைத்தது. "ஜன்னலுக்கு வருவே! எட்டிப் பாப்பே! தெரியும்! திறக்கிறியா மாப்பிளை?"

கணேஷுக்கு நாக்கு உலர்ந்தது. பேச முடியாமல் மௌனியை இறுக்கியது. மூக்கு கம்பி மேல் பதிந்து சப்பையாகியிருந்தது. "ம்! ம்! திற'றேன்" என்றான் சிரமத்துடன்.

"ரொம்ப டைம் வேஸ்ட் பண்ணாதே ராஜா! உங்கிட்ட காரியம் இருக்கு. சீக்கிரம். இல்லாட்டி கதவை ஒடப்போம்."

"திற'றேன் திற'றேன்."

கை அவனை விடுவித்து அவசியமில்லாமல் ஒரு தள்ளு தள்ளியது.

கணேஷ் தன் இழுப்பறையைத் திறந்து பார்த்தான். ஆயுதம்! ஆயுதம்! கத்தி, ஸ்க்ரூ டிரைவர், ஏதாவது, ஏதாவது! எப்போது கடைசியாகச் சண்டை போட்டோம் டில்லியில்! வஸந்த் வந்த பின் சண்டைக்குச் சந்தர்ப்பமே இல்லை.

"என்னடா லேட்டாவுது?"

"வரேன், வரேன்."

வாயிற் பக்கம் சென்று லேசாகத் திறந்து பார்த்தான். இரண்டு ஜோடிக் கால்கள் தெரிந்தன. கதவு வேகமாகத் தள்ளப்பட்டு இருவரும் தம்மைத் திணித்துக்கொண்டு மூடினார்கள். இருவரும் சுத்தமாக கணேஷை விட இருபது இருபத்தைந்து பவுண்டு கனமான ஆசாமிகள். ஒருவன் சூயிங் கம்மோ ஏதுவோ மென்று கொண்டு, கணேஷை உடனே ஏர்ப்போர்ட்டில் போல் ஆராய்ந்தான். மற்றவன் தான் பேசினான். "ஏதாவது விஷமம் செஞ்சே தீர்த்துருவோம்!" வரி வரியாகப் பனியன் போட்டிருந்தான்.

"விஷமம் பண்ண எனக்கு என்ன பைத்தியமா. சொல்லுங்க. விஷயம் என்ன சொல்லுங்க. என்னால ஏதாவது உங்களுக்கு ஆக வேண்டியது இருக்கா?"

"அதை நீதான் சொல்லணும்."

"என்ன சொல்லணும்?"

"உனக்கு என்ன தெரியும்? அதைச் சொல்லு."

"எதைப் பத்தி?"

"இத பாரு. பாசாங்கு பண்ணிக்கிட்டு விளையாடிக்கிட்டிருக்க நேரமில்லே. பளிச்சுன்னு சொல்லு. என்ன தெரியும்?"

"எதைப் பத்தின்னுதானே கேக்கறேன்."

தலைவன் கணேஷின் அருகில் வந்து பளீர் என்று கன்னத்தில் அறைந்தான். விண் என்று மண்டைக்குள் அது ஒலித்தது ஒலித்தது ஒலித்தது.

"எதுக்காக அடிக்கிறீங்க சொல்லிட்டு அடிங்க."

"சொல்லு."

"என்ன கேக்கறீங்கன்னே தெரியலியே. சொல்லு சொல்லுன்னா என்னத்தைச் சொல்றது?"

"உனக்குத் தெரிஞ்சது எல்லாம் கக்கு."

"எனக்கு ஒண்ணுமே தெரியாது."

சூயிங்கம் மறுபடி ஓங்க, "இரு பெரிய சாமி. மயிலே மயிலே இறகு போடுன்னா போடாது."

கணேஷ் சற்றுக் கலவரத்துடன் பார்த்துக் கொண்டிருக்க, அவன் தன் உள் பெல்ட்டிலிருந்து எதையோ எடுத்து 'கிட்டக்' என்றான். ஒரு கத்திமுனை பிறந்தது." பாத்தியா ஷெஃபீல்டு கத்தி. கிட்டக்க பார்க்கிறியா?" மற்றவன் கணேஷைப் பிடித்துக் கொள்ள அவன் அந்தக் கத்தியின் ஸ்டெய்ன்லெஸ் ஸ்டீல் பளபளப்பை நிதானமாக கணேஷின் புருவத்தின் மேல் ஓட்டிக் காட்டினான்.

"கண்ணைக் குத்திரலாமா பெரியசாமி?"

"வேண்டாம்" என்றான் கணேஷ் தீர்மானமாக.

"அப்ப பதில் வருமா பெரியசாமி?"

"எனக்குத் தெரிஞ்சதைச் சொல்றேன். நீங்க ராஜு ராஜன் இவற்றைப் பத்தித்தான் கேக்கறீங்கன்னு அனுமானிக்கிறேன். அதைப் பத்தி எனக்குத் தெரிஞ்சதெல்லாம் இவ்வளவுதான். கிணத்துக்குள்ளே பழங்

காலத்துப் பொற்காசுகள் நிறையப் போட்டிருக்காங்க. அதன் தற்போதைய மதிப்பு மிக மிக அதிகமாக இருக்கும். உங்கள் கிராமத்தில நிகழ்ந்த நிகழ்ச்சிகள் எல்லாம் இதனோட சம்பந்தப்பட்டதுதான். இதை யாரு செய்யறாங்க, யார் நடத்திக் காட்டறாங்க இந்த விவரமெல்லாம் எனக்கோ போலீசுக்கோ கூட இதுவரை தெரியாது.''

''கிணத்துல என்ன இருக்கு?''

''புதையல்! தங்கக் காசுகள்!''

''அப்படி யாரு சொன்னாங்க?''

''அது பற்றிச் சரித்திரக் குறிப்புக்கள் இருக்கு. நானே பார்த்தேன். ராஜராஜ சோழன் காலக் காசு.''

''வேற ஏதும் கிடையாதா?''

''வேற நிறையப்பாசித்தண்ணி இருக்கு!''

அவர்கள் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள். ''பாத்திங்களா தெரியுது இவனுக்கு! டேய்! முழு விவரத்தையும் சொல்லிடு. இல்லே கிழிச்சுப் போட்டுருவேன்.''

''அவ்வளவுதான் எனக்குத் தெரியும்.''

''பார்த்துறலாம் பெரியசாமி புடி!''

முதல் மூர்க்கன் அவனைக் காட்டுத்தனமாக நாற்காலியுடன் அழுத்திப் பிடிக்க மற்றவன் விருட்டென்ற கீறலில் கணேஷின் கன்னத்தைத் தொட்டு விட்டான். முதலில் வலிக்கவில்லை. ஆனால் சட்டையில் சொட்டுச் சொட்டாக ரத்தம் கசிவது உடனே தெரிந்தது. கணேஷ் திடுக்கிட்டான். என்னடா இது வம்பில் மாட்டிக்கொண்டு விட்டோம். இவர்கள் மனத்தில் என்னவோ நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். பதில் அவர்கள் நினைத்திருக்கும் வடிவில் வரும்வரை என்னை விடப்போவதில்லை. தர்ம சங்கடம்!

''அடுத்த வெட்டு இன்னும் ஆழமா போட்டுறலாமா வக்கீலய்யா''

''வேண்டாம் வேண்டாம்.''

அவன் ஓங்கிக் கத்தியை மறு வீச்சுக்குத் தயார் செய்யும்போது கணேஷ் ஒரு பிரம்மப் பிரயத்தனமாக எழுந்திருக்க முற்பட்டு உடனே அடிக்கப்பட்டு பிடிக்கப்படாமல் தப்பித்து உருண்டு உடனே எழுந்து ஓடினான். இருவரும் கவனமாக அவனையே பார்த்துக் கொண்டு வந்தார்கள். ''தப்பிச்சு ஓடுவீங்களா ராஜா?''

கணேஷ் வாயில் கதவைப் பார்த்தான். அந்தப் பக்கம் சான்ஸே இல்லே. கத்திப் பார்க்கலாம் என்றால் ஒன்று கிடக்க ஒன்று செய்து விடுவார்கள். கன்னத்தில் இன்னும் ரத்தம் வடியப் பின்பக்கத்துக் கதவு திறந்திருக்குமா என்று யோசித்தான். இல்லே. பூட்டி சாவி பாத் ரூம் ஆணியில் மாட்டியிருக்கும். அதற்குள் வந்து விடுவார்கள். கணேஷ் சரேலென்று –பாய்ந்து விளக்கை அணைத்தான். ''பெரியசாமி! டிரிக் பண்றான். வாசக் கதவை விடாதே! அங்கேயே இரு. அந்த இடத்தை விட்டு நகராதே.''

கணேஷ் தெரு விளக்குகளைச் சபித்தான். அவர்கள் இருவரும் உலவும் அவுட் லைன் தெரிந்தது. அதேபோல் நானும் அவர்களுக்குத் தெரிவேன். அவன் தொடர்ந்து தேர்ந்தியாக நெருப்புக் குச்சிகளைப் பற்ற வைக்கப் பற்றவைக்க மற்றவன் சிகரெட் லைட்டரை இயக்க கணேஷ் தெரிந்த மூக்கில் சொட்டேல் என்று குத்தி விட்டு இடம் மாற்றிக் கொண்டான். மூக்கு உடைந்திருக்க வேண்டும். ''பெரியசாமி! அடிச்சுட்டான்'' என்றான். ''அங்கேயே இரு. இவனை இன்னிக்குச் சமாதி பண்ணிட்டுப் போயிடலாம். இப்போது அவன் தடவித் தடவிச் சுவரிலிருந்த சுவிட்சைக் கண்டு பிடித்



துப்போட்டுவிட அறையில் மறுபடி வெளிச்சம் பரவியது. கணேஷ் கையில் பெரிய மேஜை விளக்கைக் குறி பார்த்து ஓங்கிக்கொண்டிருந்தவன் அப்படியே நின்றான். ''போடுறு போடு. மூக்கில குத்தின இல்ல இப்ப. குடலைக் கிழிக்கிறேன் பாரு.''

''வேண்டாம் வேண்டாம். எல்லாமே சொல்லிடறேன்'' என்றான் கணேஷ்.

''அப்படி வா வழிக்கு'' என்று மூக்கில் கர்ச்சீப்பை வைத்துக் கொண்டே.

''பெரியசாமி! லேட்டாண்டையே இரு. ஆசாமி சாலாக்கு. பாத்துக்கிட்டே இரு. நகந்தான்னு சொல்லிடு கிழிச்சுர்றேன். டேய்! கிழிக்கத்தான் போறேன். மூக்கில அடிச்சில்ல?''

''தெரியாமப் பட்டுடுத்து.''

''படும். இரு உன்னை... முதல்ல பேசு! விசயத்தைச் சொல்லு.''

கணேஷ் உட்கார்ந்தான் — தப்பிக்க ஐடியா உதயமாகும்வரை காலம் தாழ்த்த வேண்டும். என்ன செய்யலாம்? ரீல்விட்டுப் பார்க்கலாம்.

''இணைத்தில மட்டும் இல்லே ரகசியம்.''

''பின்ன எதில?''

''சதாசிவம் இல்லே?''

''அவன் ஏதாவது சொன்னானா?''

''சதாசிவம் இல்லாமயே தெரிஞ்சுக்கிட்டோம்.... பத்துக்கு நாப்பது குடுத்து வாங்கத்தான் நாங்க வந்தோம். செரியான பார்ட்டி கிடைக்கச்ச. பத்துக்கு அம்பது கேட்டாங்க...''

''சே! அதுக்கு யார் வருவாங்க?''

''அதானே!''

''நீ என்ன கேட்டே?''

''முப்பது.''

அது சரி. முப்பதுன்னு ஆள் வருதா?''

கணேஷ் உற்சாகத்துடன் ''அதுக்குத்தான் அருணவுக்கு வரலாம்னு அதுக்குள்ள நீங்களே வந்துட்டீங்க'' என்றான்.

''முதலாளிதான் பயலுக்கு எவ்வளவு தெரியும்னு தெரிஞ்சுட்டு வரச் சொன்னாரு.''

''எனக்குத் தெரிஞ்சதெல்லாம் வியாபாரம் மட்டும்தான். என்ன ஏது எல்லாம் தெரியலே. தெரியாதுன்னு சொல்லிடுங்க.''

''முக்கியமா அந்த விஷயம் தெரியுமா?''

''எந்த விஷயம்?''

''அதை நீல்ல சொல்லணும்.''

பெரியசாமி முதல் முறையாகப் பேசினான். ''அண்ணே இதுவரைக்கும் விசயத்தை விடாமப் பேசியிருக்கான் பாத்திங்களா. முதலாளிக்கு என்ன பதில் சொல்லிங்க?''

''பழுது பாக்காம பெரிய விசயத்துக்கு வரமாட்டான் போலத் தெரியுது. என்ன செய்யலாம்?''

''முதலாளி சொன்ன ரெண்டாவது விசயம்தான்.''

''என்னது!'' என்றான் கணேஷ்.

''பெரியசாமி வா! சுருக்கமா முடிச்சுட்டு வீட்டுக்குப் போயிரலாம். வக்கீலு! உக்கல் கிராமத்துல கோயில் வாசல்ல அந்த ஆளுக்கு என்ன ஆச்சு தெரியும்மா?'' அவர்கள் இருவரும் அவனை நெருங்க கணேஷ் இப்போது இருவர் கையிலும் கத்தி இருப்பதைப் பார்த்தான்.

''அய்யோ! நான் இன்னைக்குக் காலி!''

அவர்கள் சேதம் பண்ணும் உத்தேசத்துடன் விரோதத்துடன் நெருங்க கணேஷ் மறுபடி உரக்கக் கத்திவிடலாமா என்று யோசித்தான். பிரயோசனமில்லே. கழுத்தைக் கிழிக்க ஒரு பத்து பதினைந்து செகண்டுக்கு மேல் ஆகாது. வேறு என்ன செய்வது? குலதெய்வத்துக்கு வேண்டிக் கொள்ளலாம் என்றால் குலதெய்வம் என்ன என்று சட்டென்று ஞாபகம் வரவில்லை. இருங்க இருங்க என்று அவர்களைத் தடுக்க முயற்சி செய்து செய்யக் கூடியது எதுவும் தோன்றாத நிலையில் அந்தக் கத்தி முனை விசுவரூபம் எடுத்து அவன் பார்வை முழுதும் வியாபிக்க...

வாசல் கதவு தட்டப்பட்டது.

சட்டென்று நின்றார்கள். ''பெரியசாமி யாரு பாரு''என்றான் பெரியசாமி அல்லாதவன்.

''பாஸ்! பாஸ்!'' என்று வஸந்தின் குரல் கேட்டது. கதவு பொறுமை இல்லாமல் தட்தட்தட்டப்பட்டது.

''பேசாதே!'' என்றான் கத்திக்காரன்.

''என்னது? டெலிபோனை அவுட் ஆஃப் ஆர்டர்னுங்க. ஆள் உள்ளே இருக்காப்பல இருக்கு. விளக்கு எரியுது. நிழலாடுது...

''பாஸ்! ஏதாவது கெட்ட காரியம் பண்ணிக்கிட்டு இருக்கீங்களா? யாராவது சில்லறை உருப்படி... சேச்சே அப்படிப்பட்ட ஆசாமி இல்லையே நீங்க. ரிஷ்ய சிருங்கராச்சே, திறங்க பாஸ்!''

''ஷ்! பேசப்படாது. பேசினா நாக்கைக் கிழிச்சிடுவேன்'' கத்தி மிக மிக அருகில் பளபளத்தது.



டாக்டர்: ஒன்பதாவது வார்டு நோயாளி எப்படி இருக்கிறார்?

நர்ஸ்: அவருக்கு மேலும் கீழுமாக மூச்சு இரைக்கிறது!

டாக்டர்: என்ன ஆயிற்று அவருக்கு?

நர்ஸ்: அவர் என்னுடன் அறையினுள் ஓடிப்பிடித்து விளையாடினார்!

''இப்பத் திறக்கப் போறீங்களா கதவை உடைக்கட்டுமா?''

கணேஷ் அவனைப் பார்த்தான். அவன் சற்றுக் குழப்பத்தில் இருப்பது தெரிந்தது. இப்போது அவர்கள் விபரீதமாக ஏதும் செய்ய மாட்டார்கள். வெளியே போக ஒரே வழிதான் இருக்கிறது. அதை வஸந்த் அடைத்துக் கொண்டிருக்கிறான். 'சீக்கிரம் ஜன்னல் வழியே எட்டிப் பாரேன் முட்டாளே!'

பெரியசாமி கதவருகே சென்று ''யாரு'' என்றான் அதட்டலாக.

''அது யாரு அசரீரி?''

''சொல்லு! சொல்லுடா. போச்சொல்லு. நான் பிஸியா இருக்கேன். அப்பறம் வான்னு சொல்லு,'' என்றான் கத்தி சின்னக் குரலில்.

''வஸந்த்! பிஸியா இருக்கேன் அப்பிறம் வா!''

''கட்சிக்காரங்களோட பேசிக்கிட்டிருக் கேன்னு சொல்லு.''

''கட்சிக்காரங்களோட பேசிக்கிட்டிருக் கேன். காலைல ஏழே காலுக்கு வந்தா போதும்.''

''சரி பாஸ்'' என்றான் வஸந்த். ஏழே கால் என்றால் எஸ். ஓ. எஸ். என்று அவர்கள் சங்கேத பாஷையில் அர்த்தம்.

பெரியசாமி திரும்பி கணேஷை நோக்கி வருகையில் படீர் என்று கதவு வெடித்துத் திறந்தது.

வஸந்த் உள்ளே மடை திறந்தாற்போல் பாய்ந்தான். பெரியசாமியின் காலை ஏரெச்சில் வாரி வீழ்த்தி விட்டு அதனால் கீழே விழுந்த கத்தியை எடுத்துக் கொண்டு மற்ற வனை நோக்கி ''யோவ்! வரியா கத்திச் சண்டை? அந்தான் கிட்ட ஆயுதமில்லே. எங்கிட்டத் தைரியமிருந்தா வா. தொப்பைல கிறி சைனீஸ் ரெஸ்டாரண்ட்லே நூடில் போடுவாங்க பாரு அந்த மாதிரி குடல் பூரா துப்புரவா வெளில கொண்டு வர்றேன். வாடா ! புள் சோமாறி!'' என்றான்.

கத்திக்காரன் வஸந்தின் மேல் பாய கணேஷ் விலகி சின்னதாக ஒரு ஸ்டூலை எடுத்துப்பெரியசாமி எழுந்திருக்காமல் அவன் மண்டை மேல் போட்டான்.

''பாஸ்! அந்தக் கூஜா! அதை உப யோகியுங்க.''

வ்ஸந்த் கத்திக்காரனைப் பார்த்து: ''எதுக் கய்யா இந்த வயசுல இப்படி ஓடிவர! இப்ப நான் ஒதுங்கிட்டேன். என்ன ஆச்சு பாரு! நேரப் போய் சுவத்தில மோதிக் கிறே இல்லே? மூக்கில பட்டுதா? ரத்தம் வரதா இல்லையா? இல்லையா... வா...வா... மறுபடி ஓடிவா! உனக்குப் போறுத வேளை. வஸந்தோட ஓடிப் புடிச்சு விளையாட ணும்னு ஜாதகத்தில எழுதி வச்சிருக்கு... வா....''

மறுபடி. வஸந்தை நோக்கி ஓடி வந்த வனை அட்டாக் கொடுத்து வீழ்த்தினான். 'பாஸ் என்ன செய்யலாம்? தொப்புள்ள கத்தியை வெச்சுத் திருகலாமா இல்லை இங்கேயே ஜூபேட் பண்ணிடவா?''

''இல்லை வஸந்த்! இவங்ககிட்ட கேள் விகள் கேட்கணும்.''

(தொடரும்)

அவன்: ''என் ஜோக்குகளுக்கு என் மனைவி சிரிப்பது எனக்குக் கட்டோடு பிடிக்கலே!''

இவன்: ''ஜோக் எழுதறதே சிரிக்கிறதுக்குத்தானே...?''

அவன்: ''நீ ஒண்ணு! தினசரி தபாலில் என் ஜோக்குகள் திரும்பி வருவதைப் பார்த்துத் தான் சிரிப்பா சிரிக்கிறா அவ!''





டைரக்டர்: ''என்ன இது! நான் ஸ்டார்ட் சொல்றதுக்கு முன்னடியே சிவன் வேடத்தி லிருக்கும் ஹீரோ ருத்ரதாண் டவம் ஆட ஆரம்பிச்சுட் டாரு!''

உதவி டைரக்டர்: ''நீங்க ஒண்ணு! அவர் ஆடறது படாதிபதி ஒப்பந்தப்படி பணம் தராததற்காக!''

-உ. ராஜாஜி

"அம்மா பார்க்கிறு...த்சு, அம்மா பார்க்கிறு லலிதா..."

மாதவன், மனைவியின் கிட்டத்தில் வந்து காதைக் கடித்தான். ஒரு நிமிஷம் ஒன்றும் புரியாமல் பரக்கப் பரக்க விழித்த லலிதா தன் பிசகை உணரக் கொஞ்ச நேரம் பிடித்தது.

இடது கையால் குழம்பைக் கரண்டியில் எடுத்துக் கணவனின் இலையில் ஊற்றியவள் 'தொபுக்'கென்று கரண்டியைப் பாத்திரத்தில் போடுகிறுள். ஓரக் கண்ணுல் மாமியாரைப் பார்த்தவளின் முகம் சிறுத்தது.

பார்வதி இங்கேயே பார்த்துக்கொண்டிருந்தாள். மருமகள் கரண்டியைப் போட்டதும் எழுந்திருக்க மாட்டாமல் எழுந்து வந்தாள்.

"புருஷன்காரனுக்கும், நம்மை விட வயசுல பெரியவங்களுக்கும் இடது கையால எதையும் பரிமாறக் கூடாது லலிதா.. அதுக்காகத்தான் அவங்களை முதல் பந்தியில உட்கார்த்தி வச்சுப் பரிமாறிட்டு, அப்புறமா நாம சாப்பிடணும்னு பழக்கம் வச்சிருக்காங்க.... நீங்க ரெண்டு பேரும் சேர்ந்து உட்கார்ந்து சாப்பிடுங்க. வேண்டாங்கலே. ஏதாவது வேணும்னு ஒரு குரல் கொடுத்தால் நான் எழுந்து வந்து போடறேன்..."

பார்வதி சாதாரணமாகத்தான் சொன்னுள். ஆனுல் லலிதாவுக்குச் சுருக்கென்றது.

'புருஷனும் பெண்டாட்டியும் சாப்பிட றப்ப விறைச்சு விறைச்சு என்ன பார்வை... சே, துளிக்கூட நாகரிகமே தெரியாதவ...'

மனசுக்குள் கடுகடுத்துக் கொண்டாள்.

மாதவனுக்குக் கல்யாணமாகிப் பதினைந்து வருஷங்களாகின்றன. இத்தனை நாட்களில் சேர்ந்தாற்போல் ஒருமாசம் கூட அவன் மனைவி குழந்தைகளுடன் இந்தக் கிராமத்தில் வந்து தங்கியதில்லை.

கல்யாணமானவுடன் பம்பாயில் இரண்டு வருடக் குடித்தனம். பிறகு அவனது ஆபி





விலேயே அவனை ஐந்து வருடத் தொழிற்பயிற்சிக்காக ஜப்பானுக்கு அனுப்பினார்கள். அதற்குப் பிறகு மீண்டும் பம்பாய், மீண்டும் அமெரிக்கா, திரும்பவும் போபால், ஹைதராபாத். இப்பொழுது கடைசியாகக் கொஞ்ச நாட்களாகச் சென்னை.

மாதவனின் பெற்றோருக்கு இந்தக் கிராமத்தில் உட்கார்ந்து கொண்டு மகனின் கடிதத்தை எதிர் பார்ப்பதும், அவனுக்காகக் கவலைப்படுவதும் தவிர வேறு வேலையில்லை.

நடுவில் — இந்தியாவில் இருக்கும் காலங்களில் மாதவன் லலிதாவுடனும் குழந்தைகள் சுமா, ரவி யுடனும் கிராமத்துக்கு வருவான். ஒரு மாச லீவில் வருவான். சென்னையில் லலிதாவின் பெற்றோர் வீட்டிலேயே பதினைந்து நாட்கள் போய்விடும். மீதி நாட்களில் திருப்பதி, பழனி, மதுரை இப்படிக் கோவில்களில் வேண்டுதல்களை நிறைவேற்று வதில் ஓடிவிடும். கடைசியாக இவர்கள் கிராமத்துக்கு வரும்போது காலில் கஞ்சியைக் கொட்டிக் கொண்டாற் போல் பரக்கப் பரக்க வருவார்கள்.

# ராமன் இருக்குமிடம்

15.3.81

''இன்னும் ரெண்டு நாள் தங்கருப்பல வரக்கூடாதா மாதவா... இப்படி மூகத்தைக்கா மிச்சுட்டு ஓடிப் போயிடறயே. குழந்தைகளுக்கு வாய்க்குப் பிடிச் சதைச் செஞ்சு போடக் கூட நேரமில்லாம....''

பார்வதி, உடைந்த குரலில் மகனிடம் கெஞ்சுவாள். மாதவ னின் தந்தைராமேசனுக்குமகனின் நிலைமை புரிந்திருப்பதால் வற் புறுத்த மாட்டார்.

மாதவனைப்பொறுத்தவரையில் அப்பா, அம்மாவிடம் இன்னமும் மரியாதையும், பயபக்தியும் துளிக் கூடக் குறையவில்லை. தன்னுடன் அவர்களை அழைத்துச் சென்று வசதியாக வைத்துக்கொள்ள வேண்டும்என்றுதுடியாய்நின்றான்.

''எங்களுக்கு இது தான் சௌகரியம்.. இத்தனை நாளாப் பழகின கோயில் குளத்தையும், நிலம் நீச்சையும், மாடு கன்றையும் விட்டு விட்டுப் பட்டணம் வர முடியாது.''

# எழுதியது யார்? பரிசு ரூ500/=

இந்த வாரம் இடம் பெற்றுள்ள நான்கு சிறு கதைகளிலும் ஒரு விசேஷம். எழுதியவர் பெயர் இராது. அதற்குப் பதில் ஒரு தேதி இருக்கும். உதாரணமாய், ''ருக்குவின் கல்யாணம் குறையின்றி நடக்கும்'' என்ற கதையில் இடம் பெற்றுள்ள தேதி 12-4-81. எனவே 12-4-81 தேதி தாங்கிய கல்கி இதழை எடுத்துப் பாருங்கள். அதில் நாலு எழுத்தாளர்களின் நான்கு சிறுகதைகள் பிரசுரமாகியுள்ளன. அந்த நாலு எழுத்தாளர்களில் ஒருவர்தான் ''ருக்குவின் கல்யாணம் குறையின்றி நடக்கும்'' என்ற இந்தச் சிறுகதையை எழுதியவர். அவர் யார்? இதே போல, இந்த இதழில் இடம் பெற்றுள்ள நான்கு சிறுகதைகளையும் எழுதிய நான்கு எழுத்தாளர்களைக் கண்டு பிடியுங்கள். ஒரு தபால்கார்டில் கதையின் தலைப்பையும் எதிரே கதாசிரியரின் பெயரையும் எழுதி அனுப்புங்கள். நான்கு எழுத்தாளர்களையும் சரியாகக் குறிப்பிடுகிறவருக்குப் பரிசு ரூ. 500- ஒருவருக்கு மேல் நான்கு விடைகளையும் சரியாக எழுதினால் பரிசுத் தொகை பகிர்ந்து அளிக்கப்படும். முடிவுதேதி மே 27. ''எழுதியது யார்? என்று தலைப்பு தரவும்.''

---

தீர்மானமாகச் சொல்லிவிட்டார் ராமேசன்.

இப்பொழுது – இந்த ராமேசனுக்கு உடல் நிலை மோசமாகியுள்ளது. கிட்டத்தட்ட ஒரு மாசமாகப் படுத்த படுக்கை. மாதவனுக்குத் தகவல் கிடைத்ததும் இருப்புக் கொள்ளாமல் பறந்து வந்து விட்டான். கூடவே லலிதா, மகள் சுமா. ரவிக்கு இன்னும் பரீட்சை முடியாததால் லலிதாவின் பெற்றோர் வீட்டில் அவனை மாத்திரம் விட்டு வைக்கும்படியாகி விட்டது.

இன்றுவரை மாதவன், மனைவியைப் பிரிந்து ஒரு நாள் கூட இருந்ததில்லை. அவன் முதன் முதலாக அமெரிக்காவுக்குக் கிளம்பியபோது சுமா கைக்குழந்தை. லலிதா பிள்ளை பெற்ற பச்சை உடம்புக்காரி...

''லலிதா, அஞ்சு வருஷம் ஓட்டமாஓடிடும். நான் மட்டும் போயிட்டு வந்துடறேன். குழந்தைக்கு அந்த சீதோஷ்ணம் ஒத்துக்குமோ ஒத்துக்காதோ. சின்னக் குழந்தையை வச்சுக்கிட்டுத் தேசம் விட்டுத் தேசம் வந்து நீ சிரமப்பட வேண்டாம். பேசாம, இங்கேயே உங்க அம்மா அப்பாவோட இரு...''

''வேண்டாம். ப்ளீஸ், எத்தனை கஷ்டமானாலும் நான் அட்ஜஸ்ட் பண்ணிப்பேன். என்னையும் குழந்தையையும் அழைச்சிக்கிட்டுப் போயிடுங்க. ராமன் இருக்கிற இடம்தான் சீதைக்கு அயோத்தி... எனக்கு நீங்க இருக்கிற இடம்தான் சொர்க்கம்...''

பெருமையாக இருந்தது மாதவனுக்கு.

ஐந்து வருஷங்கள் ஓடியது தெரியவில்லை. இன்று சுமாவுக்குப் பதினாறு வயதாகிறது. ரவிக்குப் பத்து வயது. இதுவரையிலும் குழந்தைகள் படிப்புக்காகக்கூட அவள் தன் கணவனைப் பிரிய ஒத்துக்கொண்டதில்லை.

''இங்கேயெல்லாம் தமிழ் ஒரு சப்ஜெக்டாவே இல்லே லலிதா. பேசாம நீ குழந்தைகளை மெட்ராஸ்லே கொண்டு வச்சுட்டுப் படிக்க வைக்கலாம். நானும் அந்தச் சாக்குல 'ஸௌத்' பக்கம் வர முடியும்.''

அவனும் எத்தனையோ முறை சொல்லிப் பார்த்து விட்டான். லலிதா பிடிவாதமாக மறுத்து விட்டாள். குழந்தைகளுக்கு வீட்டிலேயே தமிழ் டியூஷன் வைத்தாள். சுமாவுக்குத் தேவாரமும், திருவாசகமும் சொல்லிக் கொடுத்தாள். பாரதியார்பாட்டுக்களை ராகத்தோடு பாடக் கற்றுக் கொடுத்தாள்.

இப்பொழுது சென்னை வந்ததும்தான் மாதவன் சற்று ஓய்ந்திருக்கிறான். குழந்தைகளின் படிப்பும், அவனது அலைச்சலும் ஒரு நிலைக்கு வந்திருக்கின்றன.

மாமியாரின் தொண தொணப்பும் அடிக்கடி மண்டையில் இடித்து, 'பெண்ணாய் லட்சணமாய்த் தலை குனிஞ்சு நட' என அறிவுரை வழங்கும் வீட்டு நிலைப்படியும் மாமனாரின் பக்க வாதமும்...

அலுத்து விட்டது அவளுக்கு.

எல்லாவற்றையும் விடச் சகிக்க முடியாதது தனது ஒவ்வொரு செயலிலும் மாமியாரின் தலையீடுதான்.

''ஏன் லலிதா, சுமாவோ நீயோ இங்க வந்ததுக்குப் பிறகு வீட்டுக்கு விலக்கா உட்காரவே இல்லையே, கலந்துக்கறயா...''

''நான் எப்பவோ ஒரு தடவை ஆகறேன். சுமா சிறுசு. அவளுக்கு அந்த மாதிரி பழைய சம்பிரதாயமெல்லாம் தெரியாது. குழந்தை தானே....''

''அப்படிச் சொல்லாதேம்மா. நீங்க எனக்குத் தெரியாம எப்படியோ இருந்துட்டுப் போங்க. இங்கே வேண்டாம். எனக்கு இதெல்லாம் பிடிக்காது.''

இதுமட்டுமில்லை. உடை விஷயங்களிலும் பார்வதியின் தொந்தரவு தாங்க முடியவில்லை.

''லலிதா சொல்றேனேன்னு தப்பா எடுத்துக்காதே. இத்தனை இறக்கமா கழுத்து வச்சு ரவிக்கை போட்டுக்காதேயேன். நேத்திக்குப் பக்கத்து வீட்டு மீனாட்சி உன் ரவிக்கையைப் பத்திக் கோவில்லே பிரசங்கம் பண்ணிட்டிருக்கா. சுமாவுக்கும் அழகா பாவாடை தாவணி போட்டு விடேன்... பார்க்க நல்லா யிருக்கும். நாமதான் இடம்

துக்குத் தக்கபடி நடந்துக்கணும். பட்டணத்துக்குப் போயி இதெல்லாம் மாட்டிக்கிட்டுமே....''

லலிதாவுக்கு எப்போது இந்த இடத்தை விட்டுக் கிளம்புவோம் என்ருகிவிட்டது.

அன்று இரவு தனிமை கிடைத்தபோது அவள் மாதவனைக் கேட்கிருள்:

''ஏங்க, மாமாவை மெட்ராசுக்கு அழைச்சுட்டுப் போய் ட்ரீட்மெண்ட் கொடுக்கலாமே... இந்த மாதிரி டாக்டர் வசதியில்லாத ஊர்ல வச்சுக்கிட்டுத் திண்டாட வேண்டாமே....''

''சொன்னுக் கேட்கமாட்டேங்கருரேலலிதா அவர் கடைசி மட்டும் இங்கேயேதான் இருப்பேன்னு பிடிவாதம் பிடிக்கிருர்.''

''சுமாவுக்கு அடுத்த வாரம் ஸ்கூல் திறக்கப் போருங்க.. என்ன செய்யப் போறீங்க... உங்களுக்கும் லீவு தீர்ந்து போச்சு....''

''நான் நேத்துத்தான் இன்னும் ஒரு மாசம் லீவுக்கு அப்ளை பண்ணி லெட்டர் போட்டிருக்கேன். சுமாவை யாராவது நல்ல துணையோடு மெட்ராசுக்கு உங்க அம்மா வீட்டுக்கு அனுப்பி வைப்போம். நாம ரெண்டு பேரும் இருந்துட்டுப் போகலாம்....''

ரொம்ப சகஜமாய் மல்லாந்து படுத்தபடி அவன் கூறுவதைக் கேட்டவுடன் எரிச்சல் பற்றிக் கொண்டு வருகிறது அவளுக்கு.

''இதோ பாருங்க... இன்னும் எத்தனை நாள் இங்கே இருக்கணுமோ இருந்துட்டு வாங்க. நான் சுமாவோட போறேன்.... அப்பப்பா... வீடா இது? ஒரே நரகம். ஒரு ஃபேன் இல்லே, லைட் இல்லே, குழா இல்லே... காராக்கிரகம் மாதிரி...''

''லலிதா என்ன விவரம் புரியாமல் பேசறே....''

''எல்லாம் புரிஞ்சுதான் பேசறேன். எங்க ரெண்டு பேராலேயும் இங்கே இருக்க முடியலே. உங்களுக்குத்தான் தீராது. இருக்கணும். எனக்கென்ன?''

மாதவன் அயர்ந்து போய்விட்டான்.

லலிதாவா இப்படி....

அவனுடன் இணை பிரியாமல் வரும் லலிதாவா?....

ராமன் இருக்கும் இடம்தான் அயோத்தி என்று வாய்க்கு வாய் சொல்லும் லலிதாவா?

மாதவன் பிறந்து, வளர்ந்து ஆளான இந்த அயோத்தியையே நரகம் என்று சொல்கிருள்....

'...இந்தக் காலத்து சீதைகளுக்கு நிஜ அயோத்தி பிடிக்காதோ... வசதி மிகுந்த நகர வாழ்க்கையும், ஆடம்பரமும் இருக்கிற இடங்களைத்தான் அவர்கள் அயோத்தி பட்டணமாக மதிப்பார்களா....'

சட்டென்று கண் முன் தோலுரித்து நின்ற மனைவியின் இதயத்தை அதன் வெற்றுப் பாசத்தைக் கண்கூடாய்த் தரிசித்தவனுக்கு-கண்கள் கலங்குகிறது.

● காதல் நிறைவேருமல் முறை மாமனுக்கு மனைவியாகித் தற்கொலை செய்து கொள்ளும் பெண். காதலன் கல்யாணத்தைத் தடுக்க ஒரு முயற்சியும் எடுக்காதது துரதிருஷ்டம். சும்மா (பொம்மை) பிடில் வாசிப்பதோடு காதலன் கடமை முடிந்து விடாது.

அழகு, நடிப்பு அனைத்தும் பெற்ற அம்பிகா. தனக்கென ஓர் இடத்தைப் பிடித்து வரும் வனிதா, விஜய் பாபுவின் தங்கையாக வந்து தன்னைக் கெடுத்த பன்னீரைக் கடைசியில் கொன்று முடிக்கிருர். பன்னீராக ராதாரவி, ஸன் ஆஃப் எம். ஆர். ராதா, நம்மிடம் நிறைய எதிர் பார்ப்புக்களை ஏற்படுத்துகிருர். முதலிரவு முறுக்கு இறுக்கம். அடுத்த படத்தில் திறமையைப் பார்ப்போம். நாய் வாலை நிமிர்த்த முடியாது என்பதை நிரூபிக்கும் விஜய்பாபு நடிப்பு. சாய்ந்த கழுத்தும், குதித்த நடையும் இதோடு முற்றுப்புள்ளி கேட்கின்றன.

படம் பூரா ஒரு கலகலப்பை உண்டாக்கும் குடைசாமி, (எஸ். எஸ். சந்திரன்) கவர்கிருர். இவர் தர்ம அடி வாங்கி முணு முணுக்கும் இடம் உச்சம். ஆரம்பத்தில் ஜெயிலில் இருந்து வந்து பட்டா மணியத்திடம் காளி வீரம் பேசும் போதே 'சரி, இவர் படத்தின் கடைசியில் படத்தை முடித்து வைக்க உதவுவார்' என்று நினைக்கிரும். அதே. நாள் பூரா சைக்கிளுக்கு காத்தடித்துக் கொண்டிருக்கும் இவருக்குக் கடைசியில்தான் ரோஷம் வருவது 'தமிழ் சினிமா.'

மல்லி தயாளனின் காமராவும் சந்திர போஸ் இசையும் இம்முறையும் பாராட்டுப் பெறுகின்றன.

தரையில் வாழ முடியாத மீன்கள் கடைசியில் கடலுக்குள் செல்கின்றன. அல்பாயுளில் உயிரை விடாத மீன்கள்.

—நளினி சாஸ்திரி

# தரையில் வாழும் மீன்கள்





ஆடு நனைகிறதே
என்று ஓநாய் அழுததாம்!



ஏழை விவசாயிகள் கஷ்டப்படுகிறார்களேயென்று பெரும் வசதிபடைத்தோர் ஏதேதோ பேசுவது ஏன்? ஓநாய் அழுத கதை தான்

ஒரு ஆடு மழையில் நனைந்து வந்துகொண்டு இருப்பதை ஓநாய் ஒன்று தன் குகையில் இருந்தபடி பார்த்தது. அதனுடன் அனுகூலமாகப் பேசி,தன் குகைக்குள் வரவழைத்து விட்டால் தானும் நனையாமல் ஆட்டையும் சாப்பிட்டு விடலாமே என எண்ணியது. உடனே ஆட்டைப்பார்த்து அடபாவமே! வீணாக மழையில் நனைகிறாயே!! இங்கே வந்துவிடு!!! என்று தன்னுடைய அனுதாபக்குரலில் அழுததாம்.

கூட்டுறவு இயக்கத்தில் அதிக எண்ணிக்கையுள்ள சிறு விவசாயிகளின் சராசரி கடன் பாக்கி தலைக்கு ரூ. 400/- தான். இதில் தவணை தவறியது இன்னும் குறைவு. ஆனால் எண்ணிக்கை குறைந்த பெரிய விவசாயிகள் கொடுக்க வேண்டியது ரூ. 72 கோடி. அதாவது சராசரி தலைக்கு ரூ. 800/-

இது அவர்களுக்கு ஒரு சுமையே அல்ல. வீண் விவாதம் பேசி தங்களுடைய பாக்கியையும் செலுத்தாமல் அவர்களுக்குக் கட்டுப்பட்ட ஏழை விவசாயிகளையும் தூண்டி விட்டு அவர்கள் பாக்கிகளையும் செலுத்தவிடாமல் செய்கின்றனர்.

ஏழைகளின் வறுமை என்ற போர்வையில் அவர்கள் குளிர் காய்கின்றனர்.

இவர்களது நோக்கம் அவர்களும் கடன் பாக்கிகளை செலுத்தாமல் மற்றவர்களையும் செலுத்தவிடாமல் செய்து கூட்டுறவு இயக்கத்தையே சீர்குலைத்து ஏழை விவசாயிகள் எந்த நன்மையையும் அடைய முடியாமல் செய்து அவர்களுக்கு அதிகவட்டிக்கு தங்களது பணத்தைத் தந்து அவர்களைத் தங்களின் கீழ் என்றென்றும் கட்டுப்பட்டவர்களாக வைத்திருந்து நாளடைவில் அவர்களது சொத்து சுகங்களையும் தாங்கள் தந்த கடனுக்காக கபளீகரம் செய்யத் திட்டமிடுகிறார்கள்.

ஆடு நனைகிறதே என்று ஓநாய் அழுத கதை தான்.

ஏழை விவசாயிகளே! சுயநல சக்திகளுக்குச் செவிசாய்க்காதீர்கள்.

உங்கள் கடன் பாக்கிகளை உடன் செலுத்துங்கள். தொடர்ந்து உதவிகள் பெற்று வளம் பெறுங்கள்.

## கூட்டுறவு இயக்கம் உங்கள் உடைமை.

## பெரிய விவசாயிகளின் பிடியிலிருந்து அதைப் பேணிக் காப்பது உங்கள் கடமை.

வெளியீடு : தமிழ் நாடு அரசு.

ARIES / DIPR / 180 27/81-30



# கமல் 100

76. கர்னாடக இசையில் பிடித்தமான பாடல்? —ஸ்ரீ கணநாத சிந்தூரவர்ண என்ற கீதம்.

77. இனி வளர்த்தால் அதற்கு முதலில் என்ன கற்றுக் கொடுப்பீர்கள்? —கமல் கமல் கமல்.

78. கமர்ஷியல் படங்கள், ஆர்ட் படங்கள் —வேறுபாடு என்ன? —என்னைப்பொறுத்தவரை நல்ல படங்கள் நல்லவை அல்லாத படங்கள் என்றுதான் உள்ளது.

79. சிறு வயதில் நீங்கள் எந்த விளையாட்டில் முதல்? —அனார்கலி – சலீம் விளையாட்டில். (கழுத்து வரை ஒருபெண்ணை மண்ணில் புதைப்பது)

80. ஒரு நடிகனுக்கு இன்றியமையாதது? —நடிப்பு.

81. நீங்கள் நடிப்புத் துறைக்கு வந்திரா விட்டால் என்ன செய்து கொண்டிருப்பீர்கள்? —நடிப்புத் துறைக்கு வர முயன்று கொண்டிருப்பேன்.

82. கடவுள் உங்களைப் பொறுத்தவரை விஷ்ணுவா, சிவனா, ஏசுவா, யார்? —செய்யும் தொழிலே தெய்வம்.

83. காலையில் படிப்பது? —நாளிதழ்.

84. இறைவன் உங்களுக்கு ஒரு வரம் அளித்தால் என்ன வரம் கேட்பீர்கள்? —உலகத்திலேயே சிறந்த நடிகனாக வேண்டும் என்றுதான்.

85. ஒரு புதுக் கவிதை கூறுங்களேன். —'சுதந்திரம்: இரவில் வாங்கினோம்; விடியவே இல்லை' என்று ஒருவர் எழுதினார்!

86. உலகில் மிகக் கொடூரமானது? —தோல்வி.

87. சின்ன வயதில் நீங்கள் அம்மா கட்சியா அப்பா கட்சியா? —என் கட்சிக்கு எல்லோரும் வரவேண்டும் என்று விரும்பும் பிடிவாதக் கட்சி.

88. ஹோட்டலுக்குச் சென்றவுடன் முதலில் எதைக் கேட்பீர்கள்? —பில் யார் கொடுக்கப் போகிறார்கள் என்று.

89. எத்தனை வருஷம் நடிப்பதாக உத்தேசம்? —சாகும்வரை.

90. தற்காப்புக் கலையில் தெரிந்துகொண்டது? —ஓட்டம்!

91. பிடித்தமான வாத்தியம்? —மிருதங்கம்.

92. பார்க்க விரும்பும் நாடு? —தமிழ்நாடு.

93. சென்னையில் மறக்க முடியாத இடம்? —172, எல்டாம்ஸ் சாலை.

94. முதல் முதலில் சிகரெட்பிடித்தபோது? —இருமல் வந்தது.

95. எப்பொழுது டைரக்டராவீர்கள்? —நடித்தது போதும் என்று மக்கள் சொல்லும்போது.

96. கமல் என்ற நடிகரும், கமல் என்ற கணவரும் சந்தித்தால்? —ஒருவரை ஒருவர் புகழ்ந்துகொள்வார்கள்.

97. தேர்தலில் நின்றால்? —என் வோட்டு என்னை எதிர்த்து நிற்பவருக்குத்தான்.

98. மேடைப்பேச்சில் உங்களைமயக்கியவர்? —ம. பொ. சி.

99. மன்மதனை வர்ணியுங்கள்? —சே! சே! தற்புகழ்ச்சி எனக்குப் பிடிக்காது!

100. ராஜபார்வை – ஒரு வரியில் விமர்சியுங்களேன்? —கமலின் முயற்சி; ரசிகர்களுக்கு மகிழ்ச்சி!

பேட்டி: சலன்

(முற்றும்)

# கதைத் தலைப்புப் போட்டி பரிசு பெற்றவர்கள் விவரம்:

சிறுகதைத் தலைப்புப் போட்டியில் ஓர் எழுத்தும் பிசகின்றிச் சரியாக எழுதியவர்களின் விவரம்:

1. எஸ். பி. சுகந்தன், கரூர். 2. சம்பத்குமார், ராசிபுரம். 3. ரவிசங்கர், மல்லசமுத்திரம். 4. கே. ஞானகிராமன், நங்கவரம். 5. கே. வெங்கட்ராமன், இம்மராஜபுரம். 6. எஸ். லட்சுமி, திருமங்கலம். 7. எஸ். சுப்புலட்சுமி, இராசிபுரம். 8. கே. ராஜலட்சுமி, மதுரை. 9. கே சீனிவாச ராகவன், மதுரை. 10. கே. சத்தியநாராயணன், மதுரை.

11. கே. பிரதாப்சிங் அரகண்டநல்லூர் 12. ஆர். சரஸ்வதி, மதுரை. 13. எஸ். நடராஜன், பாளையங்கோட்டை. 14. எம். சரஸ்வதி, போளூர். 15. ஜி. ஸ்ரீதரன், போளூர். 16. ஜி. விஜயலட்சுமி, சின்னமனூர். 17. பி. மகாலிங்கம், அரவங்காடு. 18. ஏ. சுவதந்திர லட்சுமி, சென்னை-17. 19. சகுந்தலா ராமகிருஷ்ணன், பெங்களூர். 20. கே. என். ராமநாதன், சென்னை-74. 21. வி. எஸ். ராஜேஸ்வரி, சென்னை-28. 22. பி. ஜெயராமன், தூக்கநாயக்கன்பாளையம். 23. வி. சாவித்திரி, கோபி, 24. வி. கிரிஜா சென்னை-4. 25. ராஜலட்சுமி சுப்பிரமணியம், சென்னை-4 லட்சுமி சுப்பிரமணியன், சென்னை-4. 26. எஸ். நாகராஜன், சென்னை-5. 27. இரா. வசீர்கான், சென்னை-59. 28. பி. கோவிந்தராஜ், தூக்கநாயக்கன்பாளையம். 29. ஏ.வி. சார்லஸ், கரூர். 30. எம். இந்திரா, நாகர் கோயில்.

31. இரா. கலா, திருப்பூண்டி. 32. ஏ.பி. எம். கோகிலா, தூத்துக்குடி. 33. ஆர். ராஜாராம், மதுரை. 34. ஆர். சாரதா, சென்னை-6. 35. வி. கோபாலன், சின்னமனூர். 36. பானுமதி ராமகிருஷ்ணன், திருவாரூர். 37. வத்ஸலா சிவராமகிருஷ்ணன் நாக்பூர். 38. கோமதி, மதுரை. 39. வி.எஸ் பிரகாஷ், சென்னை-35. 40. கௌரி ராமநாதன், ஜபல்பூர்.

41. ஏ. எம். கே. சுவாமி, புதுதில்லி. 42. டி. எம். மணி. மாயூரம். 43. ராதா கோபால், கோவை. 44. ஆர். லட்சுமி கோயமுத்தூர். 45. ஆர். கண்ணன், சின்னமனூர். 46. பிரேமா துரைசாமி, சென்னை 47. ஜெயராமன், பம்பாய்-67. 48. என். ராதா, திருவையாறு 49. என். கனகவல்லி பத்மநாபன், பம்பாய்-49. 50. பி. விமலா, ஹைதராபாத்.

51. கே. ருக்மிணி, போளூர். 52. என். உமா, வேலூர். 53. ஏ. சுல்தா பீவி, மேட்டூர் அணை. 54. என். லட்சுமி, சென்னை-17. 55. எம். வி. நாயகன், சென்னை-4. 56. எஸ். கீதா, சென்னை-24. 57. மு. ஹைதரூஸ், மேட்டூர் அணை. 58. ஏ. முனியப்பன், மேட்டூர் அணை. 59. ஏ. சாமி ஐய்யா, பிக்ஷாண்டார்கோயில். 60. ந. தண்டபாணி, வில்லியனூர்.

61. பி. திருமூலசங்கு, மதுரை. 62 சந்யா, மதுரை-2. 63. ஆர். வெங்கடாசலம், காரைக்குடி. 64. ஆர். தமிழரசன், காரைக்குடி. 65. டி. வி. சேகர், திருவாரூர். 66. கே. கணபதிராஜா, பீளமேடு, கோவை 67. டி. உமா, சந்திராபுரம். 68. க. ஜயலட்சுமி, திருச்சி-17. 69. டி. ரவி, உப்புபாளையம். 70. எஸ். சந்திரமோகன், ஆம்பூர்.

71. டி. வஸந்த மல்லிகா, ஈரோடு. 72. கி. வாசுதேவன், ஆவரம்பாளையம். 73. கே: எஸ். முருகேஷ், ராஜபாளையம். 74. நா. மகாலட்சுமி, மல்லியகரை. 75. ஈ. விசுவநாதன், பட்டாபிராம். 76. கே. ருக்மிணி, ஜாம்ஷெட்பூர். 77. மா. மணிமாறன் வடக்கன்குளம். 78. வி. லலிதா, சென்னை 61 79. எம். விஜயன், பாண்டி-4. 80. எஸ். செல்லப்பா, சென்னை-78.

81. டி. ரவிகுமார், மதுராந்தகம். 82. எஸ். ஜெயராமன், நெய்வேலி. 83. எம். ஜயலட்சுமி, மாயூரம். 84. குணசேகரன், திருச்சி-20. 85. வ. மு. குருசாமி; தஞ்சாவூர். 86. முத்துராஜலட்சுமி, காரைக்கால். 87. என். எம். இக்பால், வாணியம்பாடி. 88. டி. ஜெயராமன், சென்னை-4. 89. ஸ்ரீமதி கலாதேவி தேவராஜ், கோயமுத்தூர். 90. ஜி. சுதாகர், கோவை.

91. கே. மஞ்சுளா, சென்னை-28. 92. பார்வதி வெங்கடேசுவரன், சென்னை-53. 93. லலிதா சங்கரன், புவனேசுவர். 94. பொன்னேரி ராமு, பொன்னேரி. 95 பி.— ஆர். சாந்தி, சென்னை-25. 96. மிஸ் என்.— ரமா, கல்கத்தா-26. 97. என். கிரிஜா சென்னை-51. 98. செ. முத்து பாண்டியன் கிறிஸ்தியாநகரம். 99. ஆர். சண்முக வடிவு உசிலம்பட்டி. 100. ஏ. சண்முகம், திருமலை.

101. ஆர். பழனிச்சாமி, திருவெறும்பூர். 102. எஸ். சங்கரி, காரைக்கால். 103. க. ஜானகி, காரைக்கால். 104. சீ. ராஜலட்சுமி, தஞ்சாவூர். 105. கி. கண்ணன் தஞ்சாவூர். 106. எம். சுமதி, நெய்வேலி-2. 107. வி. சொர்ணகுமார், கோவில்பட்டி. 108. ஆர். சுல்தான், கோவில்பட்டி. 109. எஸ். சண்முகம், பாண்டிச்சேரி. 110. எஸ். பாலகிருஷ்ணன், பாண்டிச்சேரி.

111. கே. பி. வெங்கடாசலம், போத்தனூர். 112. ரா. ஸ்ரீனிவாசன், சென்னை-70 113. ஸ்ரீமதி சரஸ்வதி, ஆர்க்காடு. 114. பொன் கோ. ராமு, பொன்னேரி. 115. வி. லலிதா மணியன், சென்னை-51. 116. எம். கண்ணன், திப்பிராஜபுரம். 117. கி. பாலசுப்பிரமணியன், திருச்சி-14. 118. வி. லலிதா, பெட்டவாய்த்தலை. 119. டி. ஆர். ரவிசங்கர், வடலூர். 120. ஜி. எஸ். குமார், சிதம்பரம்.

121. வி. விஜயா, சின்னதாராபுரம். 122. ஆர். தனபால், அறந்தாங்கி. 123. வி. விமலா, தருமபுரி. 124. மல்லிகை சுந்தரம், திருச்சி-2. 125. எம். சற்குணவதி ஆரணி. 126. எஸ். ஆர். பிரபாகர்,

பெங்களூர்.34. 127. வி. லலிதா, ஸ்ரீபெரும்புதூர். 128. என். சிவராமன், பாலக்காடு. 129. ஜி. லட்சுமி, சென்னை-35. 130. கலோசனு, சேலம்-5.

131. செ. அருணாசலம், சிதம்பரம். 132. கே. சங்கர், சென்னை-33. 133. ஜே. லட்சுமி, நெய்வேலி. 134. ஆர். சுந்தரம், விழுப்புரம் 135. டி. குருநாதன், சென்னை-600101. 136. டி. பிரேமா, பல்லடம். 137. ஆர். வெங்கடேசன், சென்னை-53. 138. வி. ஆனந்தி, சென்னை-44. 139. வி. செல்வன், சேலம்-1. 140. கே. வெங்கடசுப்பிரமணியன், அரூர்.

141. பா. மனோன்மணி, சிவகாசி. 142. பி. ஜீவரத்தினம், கோவை. 143. எஸ். செல்லம், சென்னை-28. 144. லலிதா செல்வராஜ், கரூர். 145. என். புனிதவதி, புதுக்கோட்டை 146. எஸ். ஜெகநாதன், சென்னை-33. 147. எஸ். ஆர். சீதாலட்சுமி, பம்பாய். 148. பேராசிரியர்ராசகோபாலன், தேவகோட்டை 149. எஸ். ஜெயலட்சுமி, சென்னை-33. 150. டி. சுப்பிரமணியன், சென்னை-4.

151. சம்பத்குமார், சென்னை-11. 152. ஆர். பி. சாரதி, கோளம்பாக்கம். 153. என். விஜயலட்சுமி, கோவை. 154. மு. தவசியப்பன், அத்தியூர். 155. எஸ். ஆர். ரவி, மைசூர்-4. 156. ஆர். வேதவல்லி திண்டுக்கல். 157. கல்யாணி ராமநாதன் சென்னை-33. 158. பி. கமலா, திண்டுக்கல். 159. சி. செல்வராஜு, தூக்கநாயக்கன் பாளையம். 160. எஸ். அமுதா, நாமக்கல்.

161. வஸந்தி விநாயகராவ், ஈரோடு. 162 ஏ. பால்ராஜ், திருச்சி. 163. வி. ரமணன், கீழ்பெண்ணாத்தூர். 164. சீனுவாசன், சின்ன காஞ்சிபுரம். 165. பி. ராஜா, காவேரிப்பட்டினம். 166. வி. கிருஷ்ணமூர்த்தி, நாகர்கோவில். 167. கோமளா ஸ்ரீதர், பீஹார். 168. சீதா சீனிவாசன், சென்னை-44. 169. ஜமீல் நிஸ்ஸா, சென்னை-14. 170. தி. பத்மநாபன், சேலம்,6.



ஒருவன்: "நீரேன் அந்தப் பிச்சைக்காரரின் கதையை எழுத வேண்டும்?"

எழுத்தாளர்: "பாவம் சென்றவருடம் என் கதைகளைத் தன் பத்திரிகையிலே தொடர்ந்து பிரசுரித்தவரே அவர் தான்.." -எஸ். வி. ராஜசேகர்.

171. எஸ். ரவிகுமார், தலைவாசல். 172. பி. நந்தி, நீலகிரி. 173. சத்தியவதி, தர்மபுரி. 174. ஜெயலட்சுமி பத்மநாபன், மதுரை. 175. அ. மூர்த்தி, அனகாபுத்தூர். 176. என். சீதா, ஜெம்ஷெட்பூர். 177. கே. காந்தி, கரூர். 178. செ. ப. சம்பத், சென்னை-15. 179. வி. புவனேஸ்வரி, சென்னை-86. 180. கோமளா ராகவன், சென்னை-11.

181. மறைக்கோடி, சேலம்-4. 182. ஆர். வேதவல்லி, சேலம். 183. எஸ். பன்னீர்செல்வம், திருச்சி. 184. விஜயலட்சுமி ஸ்ரீதரன், பம்பாய். 185. கு. சீனிவாசன், கோவை. 186. டி. ஜெயகுமார், திருப்பத்தூர். 187. எம். குழந்தைவேலு, கோவை. 188. முரளிதரன், சென்னை-80. 189. வி. அன்னபூரணி, திருப்பூர். 190. அனந்தலட்சுமி, கோட்டூர்.

191. ஆர். சுப்பிரமணியன், பெங்களூர். 192. ப. சரஸ்வதி, கோவை. 193. வி. ஸ்ரீதர், கோயமுத்தூர். 194. ஆர். எஸ். மாலா, பாபநாசம். 195. ஆர். சீனிவாசன், மதுரை-11. 196. ஆர். ராஜலட்சுமி, கரூர். 197. சுவர்ணமாலா, கோபிச்செட்டிபாளையம். 198. டாக்டர் கண்ணன், ஹைதராபாத். 199. ச. சுரேஷ்குமார், சென்னை-53. 200. ப. ராஜேந்திரன், நாகர்கோயில்.

201. எஸ். கண்ணன், சென்னை-78. 202. பிரபா திவாகர், சென்னை-28. 203. டி.கே. பத்மா, சென்னை-28. 204. கே. ரேவதி, சென்னை-5. 205. கவிலா சுப்பிரமணியன், புதுதில்லி. 206. க. இரவீந்திரன், மதுரை 21 207. மீரா இராமகிருஷ்ணன், மதுரை-20. 208. ஆர். செல்வம், விருதுநகர். 209. எஸ். விஜயலட்சுமி, தஞ்சாவூர். 210. வி. ஜெயந்தி, சென்னை-82.

211. ஆர். சம்பத், நெய்வேலி-3. 212. ஆர். ஜெயகுமார், கபிஸ்தலம். 213. பி.எம். நரசிம்மன், கும்பகோணம். 214. ஆர். ராஜாங்கம், மாயூரம். 215. எஸ். சுவர்ணா, பாண்டிச்சேரி. 216. சுந்தரி சீனிவாசன், கடலூர். 217. க. வெற்றிவேலன், பொள்ளாச்சி. 218. ஜி. ரவிசுந்தரம், திருப்பூர். 219. வெ. சிவசுப்பிரமணியன், திருவந்திபுரம். 220. எஸ். சத்தியமூர்த்தி, கோயமுத்தூர்.

221. நா முனுசாமி, புதுப்பட்டினம் காலனி. 222. என். சீதா, சென்னை-1. 223. பி. பழனிவேலு, நெய்வேலி-2. 224. பி. எல். ராஜகோபாலன், பட்டுக்கோட்டை. 225. ஆர். வரதராஜன், சேலம்- 7226. கே. முகுந்த் அண்ட் ஆனந்த், மாயூரம். 227. ஜெகநாம்பிகை, சென்னை-91. 228. வெ. ஜெயராஜ், சென்னை-43. 229. கே. பாலாஜி, பெங்களூர். 230. நிர்மலா ராஜகோபாலன், சென்னை-5.

231. கே. கோபாலகிருஷ்ணன், பண்ருட்டி. 232. காவேரி ஜெயராமன், மதுரை 3 233. என். முரளி, சென்னை-1. 234. பி. அநுராதா, சென்னை-4. 235. வி. ராஜலட்சுமி, சென்னை-9.

குறிப்பு: நான்கு கடிதங்களில் சரியான விடையிருந்தும் விலாசமில்லை.

— MINERVA ·

# மனச்சாட்சி எழுப்பிய வினா! ம.பொ.சி

"சுதந்திர தாகம்" என்னும் தலைப்புத் தந்து இன்னொரு பாடலையும் பாரதியார் பாடியுள்ளார்.

இந்தப் பாடல் 1909ஆம் ஆண்டில் "ஜென்ம பூமி" என்னும் பெயரில் வெளியான தேசிய கீதங்களில் இரண்டாம் தொகுப்பில் காணப்படுகிறது.

விடுதலை வீரர்கள் எல்லாம் சிறையிலடைக்கப்பட்ட காரணத்தினால், தேசம் முழுவதுமே அமைதி நிலவியது. ஆம்; சுடுகாட்டு அமைதி! பாரதி புதுவையிலிருக்கிறார். அங்கும் அரவிந்தர், பாரதி ஆகியோரைச் சிறை பிடிக்க பிரிட்டிஷ் இந்தியாவின் காவலர் கூட்டம் அவர்களை முற்றுகை யிட்டிருக்கிறது. எந்த நேரத்திலும் தாங்கள் கைது செய்யப்பட்டு, ஆண்டுக் கணக்கில் சிறைத் தண்டனை விதிக்கப்படலாம்.

லோக மான்ய திலகர் ஆறாண்டு தண்டனை பெற்று, பர்மாவுக்கு நாடு கடத்தப்பட்டு அங்குள்ள சிறையிலே தவம் கிடக்கிறார். சிதம்பரனாருக்கு நாற்பதாண்டு சிறைத் தண்டனை. சிவாவுக்குப் பத்தாண்டு தண்டனை.

இந்தக் கொடுமைகளை யெல்லாம் கண்டு குமுறுகின்றது தேசியக் கவி பாரதியின் உள்ளம். தனது வேதனையை அவன் யாரிடம் சொல்லி அழுவது? அந்த நாளைய தேச பக்தர்களுக்குத் தெய்வத்தைத் தவிர வேறு துணையேது?

இதோ பாரதி சொல்கிறார்.

தண்ணீர் விட்டோ வளர்த்தோம்
சர்வேசா இப்பயிரைக்
கண்ணீரால் காத்தோம்
கருகத் திருவுளமோ?

இது பரம்பொருளுக்குப் பாரதி விடுத்த வினா. கவிஞர் உள்ளம் நொந்து ஒப்பாரி வைக்கின்றது.

"எண்ண மெலாம் நெய்யாக,
எம்முயிரின் உள்வளர்ந்த
வண்ண விளக்கிஃது
மடியத் திருவுளமோ?
ஓராயிரம் வருடம்
ஓய்ந்து கிடந்த பின்னர்
வாராது போல வந்த
மாமணியைத் தோற்போமோ?"

என்று பாடுகின்றான். ஓராயிரம் வருடம் என்று பாரதியார் பாடுவது என்ன கணக்கோ? இந்தியாவிலே அந்நியர் புகத் தொடங்கியது பாபரின் காலம் தொட்டுத்தான். அது கி.பி. பத்தாம் நூற்றாண்டென்பர் ஆராய்ச்சியாளர். சுதந்திரம் என்னும் பயிரைத் திரும்பவும் தோற்றுவித்தனர், திலகரைப் பின்பற்றிய தேசியவாதிகள். அச் சுதந்திரப் பயிரும் அடக்குமுறையால் அழிந்து போகுமோ என்பதுதான் பாரதிக்கு இருந்த அச்சம்!

'மேலோர்கள் வெஞ்சிறையில்
வீழ்ந்து கிடப்பதும்
நூலோர்கள் செக்கடியில்
நோவதுவும் காண்கிலையோ?'

என்கிறார் பாரதியார். அந்நாளிலே சிறையிலே சிதம்பரனார் செக்கிழுப்பதாக இந்துப் பத்திரிகையில் செய்தி வெளியாகி, அது தேச மக்களிடையே மனக் கொதிப்பை ஏற்படுத்தியிருந்தது. அதன் விளைவுதான் வாஞ்சி நடத்திய ஆஷ் கொலை. சிதம்பரனாரை நினைத்துத்தான்,

"நூலோர்கள் செக்கடியில்
நோவதுவும் காண்கிலையோ?"

என்று பாடுகின்றார் பாரதியார்.

"தர்மமே வெல்லுமென்னும்
சான்றோர் சொல் பொய்யாமோ?"
"கர்ம விளைவுகள் யாம்
கண்டதெல்லாம் போதாதோ?"

பாரதி குறிப்பிடும் கர்ம விளைவுகள் என்ன? 'கவிஞனே, சுதந்திரம் கோரும் இந்த நாட்டு மக்கள் தங்களிலே ஒரு பகுதியினரைத் தாழ் சாதியாக்கி விட்டார்களே, அவர்களைத் தீண்டவும் மறுக்கிறார்களே, இந்தப் பாவத்துக்கான தண்டனைதானே பரங்கியரிடம் நீங்கள் அடிமைப்பட்டிருப்பது?' இப்படி தன் மனச் சாட்சி எழுப்பிய வினாவுக்கு விடையளிப்பது போல, "கர்ம விளைவுகள் யாம் கண்டதெல்லாம் போதாதோ?" என்று கேட்கிறார் பாரதியார்.



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor : K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# நகரெங்கும் அணி செய்வோம். அதன் துவக்கமாக உங்கள் வீடுகள் அணி பெறட்டும்.




**இயோமைட் பாம்மெல் ஸின்த்தெடிக் இனாமல்.**
உயர்தர க்ளாஸ் (gloss) இனாமல். எல்லா வகை வெளிப்புற, உட்புற பூச்சுகளுக்கும் உகந்தது. 36 வண்ணச் சாயல்கள்.

**கிங்லாக் ஹை க்ளாஸ் ஸின்த்தெடிக் இனாமல்.**
ஷீட் மெட்டல் காஸ்டிங்குகள், மரம், மெஷின்கள் ஆகியவற்றுக்குச் சிறந்த பூச்சு. நீடித்திருப்பது. அலங்காரமானது. 36 வண்ணச் சாயல்கள்.

**இயோமைட் அக்ரிலிக் இமல்ஷன்.**
உயர்தர பெயின்ட். பட்டுப் போல மென்மையான ஃபினிஷ். நீடித்திருப்பது. கழுவக்கூடியது. 34 வண்ணச் சாயல்களில் கிடைப்பது.

**ஸுப்பர் ப்ளஸ்ஸெம் வாட்டர் ப்ரூஃப் சிமெண்ட் கோட்டிங்.**
உட்புற, வெளிப்புறப் பரப்புகளுக்கு. சிறப்பாக, மணல், கல்நார், காங்க்ரீட், செங்கல் ஆகியன வேய்ந்த பரப்புகளுக்கு மிக ஏற்றது. 20 வண்ணச் சாயல்கள்.

**இயோமைட் ஸுப்பர் ஃபைன் அலுமினியம்.**
எல்லா வகை ஸ்டீல் அமைப்புகளின் வெளிப் பரப்பைப் பாதுகாக்க. வெப்பத்தினின்றும், தீவிர சூழ்நிலைகளினின்றும் பாதுகாக்கிறது.

**கர்லாக் ஆட்டோ ஃபினிஷ்.**
வாகனங்களுக்கு உகந்தது. பளபளப்பான ஃபினிஷ் கொண்டது. 40 வண்ணச் சாயல்களில் கிடைக்கிறது.






**கர்வாரே பெயின்ட்ஸ்**





HTB-GPL-6297